# கல்கி

ஸ்டீரோ...ஸ்டைலோ...ஸ்மார்ட்டோ...




KALKI ● 21.09.2008 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்

ஹிந்து பெயர் கொண்ட முஸ்லிம்கள்!



இசையின் புன்னகை!



# பைபாஸ் சர்ஜரிக்கு பை-பை

## சொன்னவர்களின் உண்மைக்கதை



**R. Karunanithi, Age:53, Mobile: 94427 04042**
**Tamilnadu State Transport Corporation, Madurai.**

முதற்கண் என் மகிழ்ச்சி கலந்த நன்றியை நியோமெட் மருத்துவர் டாக்டர் சிவபாலன் அவர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன். நான் வேகமாக நடக்கும் போதும், கடினமாக வேலைகள் செய்யும் போதும் மார்பு பகுதியில் ஓர் அசாதாரமான ஒரு உணர்வு ஏற்படுவதை உணர்ந்தேன். என் இருதயத்தில் அடைப்பு இருப்பது கண்டறியப்பட்டு பைபாஸ் சர்ஜரி பரிந்துரைக்கப்பட்டது. நியோமெட் மருத்துவமனையில் 3 மாதங்கள் சிகிச்சைக்கு பிறகு எனக்கு அடைப்புகள் நீங்கி ஒரு புதிய சக்தி கிடைத்தது போல் உணர்ந்தேன். சிகிச்சை முடிந்து 3 வருடங்கள் ஆன பிறகும் இன்னும் நான் என் வேலைகளை நன்றாக செய்ய முடிகிறது.



**S.Tamil Maran, Age: 57, Dharmapuri. Mobile: 94428 52687**

எனக்கு ஜூலை 2006-ல் எதிர்பாராத விதமாக **Heart Attack** என்ற இதய அடைப்பு ஏற்பட்டது. மருத்துவர்கள் பைபாஸ் சிகிச்சை செய்தால்தான் உடல்நலம் பெறும் என்று கூறினார்கள். 90% இரண்டு அடைப்பு உள்ளது என்றும் எட்டு நாட்களில் பைபாஸ் சர்ஜரி செய்யவேண்டும் இல்லையெனில் ஆபத்து நிலையை எதிர்கொள்ள வேண்டியதிருக்கும் என்று கூறினார்கள். இந்த சூழ்நிலையில் அறுவையில்லா பைபாஸ் சிகிச்சை செய்துவரும் நியோமெட் மருத்துவமனையை பற்றி நண்பர்கள் மூலம் அறிந்து டாக்டர் சிவபாலன் அவர்களை சந்தித்தேன். அவரது சிறப்பான சிகிச்சையால் சிதிலமடைந்த என் இதயத்தை சீராக்கி இரண்டரை மாதங்கள் சிறப்பான சிகிச்சை அளித்தார்கள். **Insulin** ஊசி பயன்படுத்திய எனக்கு ஊசியை அகற்றி மாத்திரைகள் மூலம் நீரழிவு நோயை கட்டுப்படுத்தி சிகிச்சை அளித்தார்கள். தற்போது எந்த குறைபாடும் எந்தவித வலியும் இல்லாமல் நன்றாக உள்ளேன். டாக்டரின் ஆலோசனைப்படி உணவு கட்டுப்பாடு உடற்பயிற்சி, யோகா மூலம் சிறப்பாக செயல்படுவதால் இதய-நோய்க்கு பைபை சொல்லிவிட்டேன். டாக்டரின் அன்பான உபசரிப்பு, என் தன்னம்பிக்கை கிடைத்த வெற்றியாக கருதுகிறேன்.



**S.N. Krishnamoorthy, Businessman, Age: 64, Chennai. Mobile: 9710450182**

எனக்கு பிப்ரவரி - 17, 2005-ல் மாரடைப்பு ஏற்பட்டது. ஆஞ்சியோகிராமில் மூன்று இடங்களில் 80% - 90% அடைப்புகள் தெரிய வந்து அறுவை சிகிச்சை பரிந்துரைக்கப்பட்டது. எனக்கு பைபாஸ் சர்ஜரி விருப்பமில்லாததால் அறுவையில்லாமல் பைபாஸ் சிகிச்சை செய்து வரும் நியோமெட் மருத்துவமனையில் இரண்டரை மாதம் **E.E.C.P** மற்றும் **Artery Clearance Therapy** எடுத்துக் கொண்டேன். அதன் பிறகு செய்த **TMT - Negative** என்று வந்தது. கார்டியோகிராம் பரிசோதனையிலும் இருதயத்திற்கு குறைபாடு இல்லாமல் இரத்தம் செல்வதும் கண்டுபிடிக்கப்பட்டது. இந்த அற்புதமான சிகிச்சை முறையில் எனக்கு புதுவாழ்க்கைத் தந்த நியோமெட் மருத்துவமனையில் தலைமை டாக்டருக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த எளிமையான சிகிச்சை முறையைப் பயன்படுத்தி என் போன்ற பல இதய நோயாளிகள் பயன்பெறட்டும் என்று வாழ்த்துகிறேன்.



**NEOMED HOSPITAL**
CARE FOR BETTER LIVING

**CHENNAI** : 2181, L-Block, 12th Main Road, Anna Nagar, Chennai - 600 040. Ph: 044-26201147, 26200882
**MADURAI** : 11, Lakeview Road, Opp.Sundaram Theatre, K.K.Nagar, Madurai - 625 020. Ph: 0452-2581414, 2581515
**SALEM** : 127/1, 'Varalakshmi Towers', Gandhi Road, Salem - 636 007. Ph: 0427-2311818, 2311819

www.neomedhospitals.com *Timing: Weekdays 9 am to 6 pm. Sunday holiday*

● பி.அம்மாசி, கொள்ளிடம் கீழணை

*கிரேசியண்ணாச்சி... கிரேசியண்ணாச்சி... குஷ்பு இட்லி போல, நமீதா இட்லி வரவில்லையேன்னு என்னைக்காச்சும் கவலைப்பட்டதுண்டா அண்ணாச்சி..?*

ஸாரி தம்பிச்சி. எப்பவுமே நான் வீட்டுலதான் இட்டிலி... வெளில பட்டினி...

● ராணி, திண்டிவனம்

*கிரேஸி... ஒரு சைவ A ஜோக் சொல்ல முடியுமா?*




முடியாது. சைவத்துக்கு முன் A போட்டால் அப்புறம் அது அசைவ ஜோக் ஆகிவிடுமே...!

● பி.சிவா, பாளையங்கோட்டை

*மனசாட்சி நமக்கு நண்பனா? இல்லை எதிரியா?*

ரிலேடிவ். சமயத்துக்குத் தகுந்தாற் போல மாறும். குழந்தையும், மனசாட்சியும் கொண்டாடும் இடத்திலே... அதைக் கண்டுக்காதீங்க. அது நம்பளை வச்சுக்கிட்டு காமெடி பண்ணும். அதனாலதான் அதுக்குப் பேரே WITனெஸ்னு வச்சிருக்கான் வெள்ளைக்காரன்.

● ரா.பிரசன்னா, மதுரை

*ஏன் ஸார்... தொண்ணூறை விட எண்ணூறு பெரிசுன்னு சொல்றோமே... எப்படி ஸார்?*

தொண்ணூறு வெறும் எண்... ஆனா எண்ணூரு ஒரு ஊர். எண் பெரிசா... ஊர் பெரிசா... எண்ணிப் பாரு!

● எஸ்.ஜானகி, உடுமலைப்பேட்டை

*அது என்ன... ஆட்டுக்கு மட்டும் ஆண்டவன் வாலை அளந்து வச்சிருக்கான்?*

நாய்க்கு வாலை நீளமா வச்சிட்டு அதை நிமிர்த்தமுடியாத கடுப்புல, முன்னெச்சரிக்கையாக ஆட்டுக்கு வாலை ஆட்டக்கூட முடியாத அளவுக்கு, அளந்து வச்சிட்டான் போலும்.

# கிரேஸியைக் கேளுங்கள்

● வ.வைகுண்டம், சென்னை

***உங்கள் வாரிசு, அதாவது மகன் எப்படி Shine பண்ணவேண்டும் என்று நினைக்கிறீர்கள்?***

யாரும் ஏத்திவிடாமல், எதனாலும் பத்திக் கொள்ளாமல், சுயமாகப் பிரகாசிக்கும் சூரியன் போல Let the son shine.

● திருமலையப்பன், மதுராந்தகம்

***சிற்றின்பம் - பேரின்பம்... என்ன வித்தியாசம்?***

சிற்றின்பம் சிறைப்படுத்தும். பேரின்பம் விடுதலையளிக்கும்.

## இல்லா ஜோக்



● ஆர்.கோபாலன், மேற்கு மாம்பலம்

***கிரேஸியாரின் பார்வையில் செஞ்சோற்றுக் கடனில் சிறந்தவன் கர்ணனா, கும்பகர்ணனா?***

இந்தச் செஞ்சோற்றுக் கடனுக்கும், கர்ணன் என்ற பெருக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது. துரியோதனாதியர்கள் நூறில் தேறிய, நல்லவன் விகர்ணனையும் இந்த லிஸ்ட்டில் சேர்க்கலாம்.




**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: **சீதா ரவி**

உதவி ஆசிரியர்: **கதிர்பாரதி**

வடிவமைப்பு:
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி:
044 - 4343 8888 (30 lines)

தொலைநகல்: 044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு:
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு:
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு:
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள்:
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி:
www.kalkionline.com*

சந்தா விவரம் - உள்நாடு:
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ.2,700/-

**Bharathan Publications Private Limited.**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.




**கை**யில் செல்ஃபோன், கவிதைகளோடு உறவாடி, இனி என்ன நடக்கும் என தஞ்சை பரத்வாஜைக் கேட்டுக் கொண்டு விலகும்போது, திக்திக் தொடர்கதை பயங்காட்ட, நல்ல சமயத்தில் வேளுக்குடியார் கண்ணனைக் காட்ட.... நிம்மதியாய்த் தூங்கப்போனோம். அட... அட.... ஒரு கல்கி இதழில் இவ்வளவு ரசங்களா?

- **'வானவில்' மூர்த்தி, கடலூர்**

**21** வாரங்களாக, கண்ணனைத் தேடி நம்மையும் அழைத்துக் கொண்டு ஊர் ஊராகச் சுற்றிய வேளுக்குடி கிருஷ்ணன் சுவாமிகள், உஷை கல்யாணத்துக்கும் அழைத்துச் சென்று சுபமாக முடித்துவிட்டார். திருத்தலங்களில் கிருஷ்ணன் தங்கியதுபோல், வேளுக்குடி சுவாமிகளும் நம் மனத்தில் தங்கிவிட்டார். அடுத்த பயணத்தை ஆவலுடன் எதிர்பார்க்கிறோம்.

- **சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி**

**பு**ரூரவஸ் சக்ரவர்த்தி இராமனுக்குப் பல ஆண்டுகள் முற்பட்டவன்; ஸ்ரீராமனுடைய மூதாதையர்களுள் ஒருவன்; திருத்தலங்கள் பெயர் வரக் காரணம்- இப்படி பல தகவல்களை அறியத் தந்த அரிய பொக்கிஷம், வேளுக்குடி கிருஷ்ணன் சுவாமிகள் கட்டுரைகள். மெச்சத் தக்கவை.

- **பா.அச்சுதன், வயலூர்**

**'க**ண்ணனைத் தேடி' கிருஷ்ணன் நடத்திய கல்யாணத்தில் முடிந்து விட்டாலும், அடுத்த இனிய சந்தர்ப்பத்தை ஆவலுடன் எதிர்நோக்குகிறோம்.

- **பி.ஹேமாம்புஜம், சென்னை**

## திக் திக் to

**உ**லகம் முழுக்க உள்ள நூல்கள் இலவசமாகக் கிடைக்க, அமெரிக்காவின் கார்னகி மெல்லன் யூனிவர்சிடி வழி செய்து இருக்கிறது என்றால் 'ஓட்டையில் ஓராயிரம் புத்தகம்' ஓ.சி.ஆர். பண்ண (ஓசியில் ரீட் பண்ண) நான் ரெடி.

- **சி.என்.ரமாதேவி, சென்னை**

**கா**வல்துறையில் இருப்பவர்களை மாமியார் போல குட்டிக்கொண்டே இருக்கவேண்டும். அப்போதுதான் அவர்கள் ஒழுங்காக வேலை செய்வார்கள் என்கிற டி.ஜி.பி.யின் பேட்டி. சரியானது... உண்மையானது... பாராட்டுகள்.

- **உமாதேவி பலராமன், திருவண்ணாமலை**

வாசகர்களின் இதயப் புன்னகையைப் போல, இந்த இதழைப் பல்வேறு புன்னகைகளால் சேர்த்துக் கட்டியிருக்கிறோம் - உங்களை சுவாரஸ்யப்படுத்த!

# தெரிஞ்சுக்கோ

பசியோடு படிப்பது எவ்வளவு கொடுமை என்பதை மிக அழகாக விளக்கியது 'பசி' சிறுகதை.

- வி.ஆர்.ராஜேஷ், சென்னை

'ஜீவாவின் இறப்பு- சினிமாவுக்குப் பேரிழப்பு' என 'தாம்தூம்' விமர்சனத்தில் கூறியிருப்பது மனத்தைத் தொட்டது.

- த.சத்தியநாராயணன், அயன்புரம்

எங்களின் இதய தளபதி விஜய் பற்றிய அவரது அம்மாவின் 'என் செல்ல தளபதி' கட்டுரைத் தொடர் நிறைவு பெற்றாலும், விஜய் பற்றியும் அவரின் குண நலன்கள் பற்றியும் முழுமையாக அறிய முடிந்தது. ஒவ்வொரு வாரமும் போட்டி வைத்து - விஜய் படம் பொறித்த டீ ஷர்ட், ஃபோட்டோ என வழங்கி வாசகர்களை

# திருவடி

மகிழ்வில் ஆழ்த்திவிட்டீர்கள்.

- என். சண்முகம், திருவண்ணாமலை

தீ விபத்து மற்றும் பீகார் வெள்ளம் இரண்டுமே தொலைநோக்குப் பார்வையில்லாத, அலட்சியமான அதிகாரிகள் மற்றும் அரசியல்வாதிகளின் மெத்தனத்தால் ஏற்பட்டது என்பதைச் சரியான தீர்வுடன் சொன்னது தலையங்கம்.

- ஆர்.நாகராஜன், சென்னை

அன்றும் இன்றும் என்றும் பகுதியில் பொறாமையின் பெருமையைப் பற்றி கூறியது, யதார்த்தமான நிலையை விளக்கியது.

- ஜி.கல்யாணசுந்தரம், சென்னை

பிட்சாடனர் பற்றிய கட்டுரை மகிழ்விக்கிறது. தரிசிப்பவர்களின் கர்ம வினைகளை எல்லாம், அவர் 'பிச்சையாக ஏற்றுக்கொண்டு விடுவார் என்பது மெய் சிலிர்க்க வைக்கிறது.

- என்.பாலசுப்பிரமணியன், சென்னை

அழகிரி, ஸ்டாலின், கனிமொழி, கயல்விழி நால்வருமே கலைஞருக்கு உற்ற துணைபோல தமிழகத்தை வலம் வருதலைக் கிண்டலடிக்கிறார் நாஞ்சில் சம்பத். கடையை யார் கட்டுகிறார்கள் என்பதை வரும் எம்.பி. தேர்தலும், அதன் பின் வரும் எம்.எல்.ஏ. தேர்தலும் உணர்த்தும்.

- கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு

# வட்டமேஜை

**அ.தி.மு.க.வின் ஸீனியர் பிரமுகரும், முன்னாள் உணவுத்துறை அமைச்சருமாகிய பொள்ளாச்சி ஜெயராமன், அவரது தலைவிக்காக இங்கே வரிந்து கட்டுகிறார்.**

**அம்மா மீது குற்றச்சாட்டு :** கழகத்துக்குத் துரோகம் செய்துவிட்டு, தி.மு.க.வுக்குச் செல்லும் ஓடுகாலிகள் வழக்கமாகச் சொல்லும் குற்றச்சாட்டுகள்தான் 'அம்மாவைச் சந்திக்க முடியவில்லை' என்பதும், 'கழகம் அவர் கட்டுப்பாட்டில் இல்லை' என்பதும். ஒரு கோடிக்கும் அதிகமான தொண்டர்களைக் கொண்ட அ.தி.மு.க. ஓர் இரும்புக்கோட்டை. அந்தக் கோட்டையை ராணுவக் கட்டுப்பாட்டுடன் நிர்வகித்து வருபவர் புரட்சித் தலைவி.

நேரடித் தொடர்பில்லாமல் இது சாத்தியமா? எனவே ஓடுவதற்கு தயாராகிக் கொண்டிருக்கும் துரோகிகளை அவரால் எளிதில் அடையாளம் காணமுடியும். புரட்சித் தலைவியின் தலைமையை ஏற்றுக்கொண்ட, எம்.ஜி.ஆர். தொண்டர்கள் ஒருவரும் இவர்கள் பின்னால் செல்லாமல், இருப்பதிலிருந்தே, ஓடிப்போனவர்கள் சுத்த சுயநலவாதிகள் என்பது புரியும்.

**ஜெ.வுக்காக ஊழல் செய்தாரா?**

புரட்சித் தலைவிக்காகத் தான் ஊழல் செய்ததாகப் பிதற்றுகிறார் செல்வகணபதி. எங்கோ மூலையில் கிடந்த இவரை அமைச்சராக்கியவர் அம்மா. அம்மாவின் நம்பிக்கைக்குத் துரோகம் செய்தவர் செல்வகணபதி. அமைச்சராக இருக்கும்போது இவர் போட்ட கையெழுத்தை நம்பி, கோப்புகளில் ஒப்புதல் கொடுத்தவர் அம்மா. இவரை நம்பிக் கையெழுத்திட்டதால் வழக்குகளில் சிக்கிக்கொண்டார். ஆனால் தன்மீது போடப்பட்ட வழக்குகளை நீதிமன்றங்களில் தைரியமாக எதிர்கொண்டு, தன்னை நிரபராதி என்று நிரூபித்துவருகிறார் அம்மா. ஆனால் இவரோ, ஊழல்செய்து வந்த சொத்துக்களைக் காப்பாற்றிக்கொள்ள, தி.மு.க.வுக்கு ஓடிவிட்டார்.

**தெருவில் இறங்கி ஜெ. ஏன் போராடுவதில்லை?**

மக்களைப் பாதிக்கும் எல்லாப் பிரச்னைகளிலும், அம்மாவின் உத்தரவுக்கு ஏற்ப நாங்கள் தெருவில் போராடுகிறோம். ஆனால் அம்மா ஏன் தெருவுக்கு வருவதில்லை என்று கேட்கிறார்கள். அம்மா நேரடியாகக் களத்தில் இறங்கினால் அங்கே லட்சக்கணக்கான தொண்டர்கள் கூடுவார்கள். சட்டம் - ஒழுங்கு பிரச்னை ஏற்படும். மேலும் தி.மு.க.வின் காவல் துறை எங்கள் தலைவிக்கு விஷமிகளிடமிருந்து பாதுகாப்பு கொடுத்துள்ளது. எனவேதான் போராட்டங்களில் அவர் நேரடியாகக் குதிப்பதில்லை. ஆனால் அவசியம் ஏற்பட்டால் களத்தில் குதிக்கத் தயங்கமாட்டார் அம்மா.

**தி.மு.க.வுக்கு மாற்று அ.தி.மு.க. தானா?**



● பொள்ளாச்சி ஜெயராமன்

சென்ற சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க. கூட்டணி பெற்ற மொத்த வாக்குகளைப் பார்க்கும்போது, நாங்கள் பத்து லட்சம் வாக்குகள் மட்டுமே குறைவாகப் பெற்றோம். இப்போது வந்துள்ள தே.மு.தி.க. உட்பட புதிய கட்சிகளால் எங்கள் வாக்கு வங்கிக்கு எந்தப் பாதிப்பும் இருக்காது. மேலும் அம்மா ஆட்சியில் தமிழகம் அமைதிப் பூங்காவாகத் திகழும் என்பது மக்கள் அனுபவப்பூர்வமாக உணர்ந்தது. குறிப்பாக மின்தட்டுப்பாடு என்பதே இருக்காது. சென்னை நகரின் தாகத்தைத் தணிக்க, வீராணம் திட்டத்தை, மிகக் குறைந்த காலத்தில் செயல்படுத்திக் காட்டினார் புரட்சித்தலைவி.



# ஜெ. தெருவில் இறங்கிப் போராடுவாரா?

**ஒரு ரூபாய் அரிசி :**

இனி கடத்தல்காரர்களுக்கும், கோழிகளுக்கும் குஷிதான். தி.மு.க. ஆட்சிக்கு வரும்போதெல்லாம் ரேஷன் அரிசி கடத்தல் என்பது அந்தக் கட்சிக்காரர்களின் முக்கியத் தொழிலாகிவிடும். கில்லாடிகள் அவர்கள். அதேசமயம் கடத்தலைத் தடுக்கும் நேர்மையான அதிகாரிகளும் தி.மு.க. ஆட்சியில் பழிவாங்கப்படுகிறார்கள். கடத்தல்காரர்கள் மேலிடம் வரை கப்பம் கட்டுவதால் அவர்கள் வைத்தது தான் சட்டம். அப்படியே ரேஷனில் ஒரு ரூபாய் அரிசி வாங்குபவர்கள்கூட, வழங்கப்படும் தரமற்ற அரிசியைக் கோழிக்குத் தீவனமாகத்தான் பயன்படுத்துவார்கள். இனி அரிசியை இலவசமாகக் கொடுத்தால் கூட, தி.மு.க. தேர்தலில் வெற்றி பெறமுடியாது என்பதே நிதர்சன நிலை.

**- ப்ரியன்**

படம் : **ராஜன்**

# 'கல்கி' விழா

# தினமணி ஆசிரியர்

''நான் ஜப்பானுக்குச் சென்றிருந்த போது, ஒரு நாளிதழில் உதவி ஆசிரியை யாகப் பணிபுரிந்த பெண்மணி ஒருவர், என்னை அவரது வீட்டுக்கு அழைத்தார். மாலையில் அவர் வீட்டுக்குச் சென்றேன். அவரது குடும்பமே, ஜப்பானியப் பாரம் பரிய உடையில் இருந்தது. வரவேற்பும் ஜப்பானிய பாணிதான். குடும்பத்துக்குள் ஜப்பானிய மொழியில்தான் பேசிக் கொண் டார்கள். 'உங்களை மதியம் அலுவலகத் தில் பார்த்தபோது ஜீன்ஸ் பேண்ட், ம ஷர்ட் என.. மாடர்னாக இருந்தீர்கள். இப் போது பாரம்பரிய உடைக்கு மாறிவிட்டீர் களே' என்று ஆச்சர்யத்துடன் கேட்டேன். 'வயிற்றுப் பிழைப்புக்காக வேலை செய் கிற இடத்தில், இன்றைய சமூகச் சூழலை யொட்டி அந்த உடை; மற்றபடி வீட்டில் நாங்கள் எங்கள் பாரம்பரியத்தைச் சிறிதும் மறக்கமாட்டோம்' என்றார் அந்தப் பெண் மணி. ஆனால் நமது நாட்டில் என்ன நடக் கிறது? நமக்கு நாட்டுப்பற்று குறைந்து வருகிறது. கலாசாரம், பண்பாடு ஆகியவற் றைக் காற்றில் பறக்கவிடுகிறோம். நாங் களெல்லாம் 'கல்கி' எழுத்துக்களைப் படித்து, மனதில் உள்வாங்கி நமது பாரம்பரியம், கலாசாரம், பண்பாடு ஆகியவற்றை உணர்ந்து, பெருமைப்பட்டு, வாழ்க்கை முறையை அமைத்துக்கொண் டோம். ஆனால் இன்றைய இளையதலை முறை தொலைக்காட்சியைப் பார்க்கிறது. எதையும் உள்வாங்க முயல்வதில்லை'' என்று பேசினார் தினமணி ஆசிரியர் கே. வைத்தியநாதன்.



* விருது பெறும் கணபதிராமன், கே.காயத்ரி



* செல்வி ஜெயஸ்ரீ

எங்கே? கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை சார்பில், மயிலை பாரதிய வித்யா பவனில் செப்டெம்பர் 9 மாலை நடந்த அமரர் கல்கி பிறந்த நாள் மற்றும் இளம் இசைக் கலைஞர்களுக்கு விருது வழங்கும் விழாவில்.

''குருவருளும், திருவருளும் எனக்கரு ளும் கணபதியே'' என்று அனைவரையும் ஈர்க்கும் குரலில் இறைவணக்கம் பாடினார் ஜெயஸ்ரீ சுவாமிநாதன். இவரது குருவோ

கானசரஸ்வதி டி.கே. பட்டம்மாளின் பேத்தி காயத்திரி சுந்தரராமன்.

அறக்கட்டளை அறங்காவலர் கல்கி ராஜேந்திரன் வரவேற்றுப் பேசுகையில், ''இருபத்தியொரு ஆண்டுகளுக்கு முன்னர் பத்து, நூறு ரூபாய் நோட்டுக்களைக் கொடுத்து, கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளையை தமது அதிர்ஷ்டக்கரங்களால் துவக்கி வைத்தார் எம்.எஸ். 'இது அமோகமா வரும்' என்று வாழ்த்தினார். அவரது வாழ்த்து இன்று உண்மையாயிருக்கிறது. முதல் ஆண்டு, படிப்பில் சிறந்து விளங்கி பொருளாதாரத்தில் மிகவும் பின்தங்கியுள்ள மாணவ, மாணவிகளுக்கு ரூபாய் பத்தாயிரம் அளவுக்கு உதவினோம். ஆனால், மூலதன நிதி பெருகியதன் விளைவாக இந்த வருடம் மூன்று லட்சத்து ஓராயிரம் ரூபாய் உதவித் தொகை வழங்கியிருக்கிறோம்'' என்றார்.

ஏழை மாணவர்களுக்கு உதவும் நோக்கம் அறக்கட்டளைக்கு எப்படி உண்டானது என்பதையும் அவர் விளக்கினார். ''வறுமை காரணமாக 'கல்கி' உயர்நிலைப் பள்ளிக்குச் சென்று கற்க முடியவில்லை. ஒரு இடைவெளிக்குப் பின்னர் அவரது சித்தி, அவரை உயர்நிலைப் பள்ளியில் சேர்த்தார். அப்போது வாலிப வயதைத் தொட்டுவிட்ட கல்கி, வெட்கப்பட்டுக் கொண்டு மீசையை மூடிக்கொண்டு பள்ளி செல்வாராம். ஆனால், பின்னர் சுதந்திரப் போராட்

✱ கே. காயத்ரியின் குரு...



✱ ...சுகுணா புருஷோத்தமன்

✱ கணபதிராமனின் குருக்கள்...



✱ ...ஸ்ரீரங்கராஜபுரம் ஜெயராமன்



✱ நாகை சௌந்தர்ராஜன்

✱ விழா நாயகர்



✱ கல்கி அன்பர்கள்



# பெற்ற நோபல் பரிசு!



* கல்கி ராஜேந்திரன்

டத்தில் குதிப்பதற்காக, அவர் படிப்பை விட்டது சரித்திரம். எனவே, 'படிப்பு விஷயத்தில் தாம் சிரமப்பட்டது போல்யாரும் படக் கூடாது' என்ற அடிப்படையில், பலருக்குப் படிப்பதற்காக உதவி செய்திருக்கிறார். எனவேதான் அவரது பெயரில் அமைந்த இந்த அறக்கட்டளையும் அந்தப் பணியைச் செய்துவருகிறது'' என்று குறிப்பிட்டார் கல்கி ராஜேந்திரன்.

கல்கியின் எழுத்தும், செயலும், தேச பக்தி என்ற கனலில் புடம்போடப்பட்டதால்தான் வரலாற்றில் இடம்பெற்றார். அந்தத் தேசபக்தியின் ஒரு வெளிப்பாடு, நமது தொன்மையான கலைகளின் மறுமலர்ச்சிக்கு அவர் எடுத்துக்கொண்ட முயற்சிகள். எனவேதான் அவரது பிறந்த நாளன்று பலிச்சிடும் இளம்பாடகர் ஒருவரையும், பக்கவாத்தியக் கலைஞர் ஒருவரையும் தேர்ந்தெடுத்து விருதும், பரிசும் வழங்கிவருகிறோம் என்ற கி.ரா., ''இதுவரை இருபத்திரண்டு கலைஞர்களுக்கு 'கல்கி' விருதும் பரிசும் கொடுக்கப்பட்டிருக்கிறது'' என்றார்.

''இந்த நிகழ்ச்சியில் கலந்துகொள்வது என்பது எனக்கு நோபல் பரிசு கிடைத்தது போல'' என்று தலைமையுரையைத் துவக்கினார் தினமணி ஆசிரியர் வைத்தியநாதன். ''எழுத்து-படிப்பு என்ற ஆர்வமுள்ள எல்லோர் மீதும் 'கல்கி'யின் பாதிப்பு நிச்சயம் இருக்கும். எனது எழுத்தார்வத்துக்குத்

## இசையின் புன்னகை!

**நா**ட்டை ராகத்தில் 'சித்தி அருள் சிவசக்தி பாலகனே' என்று எடுப்பாக ஆரம்பித்து, அழகான கச்சேரிக்குக் கட்டியம் கூறினார் கல்கி விருது பெற்ற கே.காயத்ரி. தொடர்ந்து, விரிவான மோஹன ராக ஆலாபனை. சிறகடித்து மேல் ஸ்தாயியில் பறந்தது அவருடைய இனிய குரல். அதற்கு அழுத்தம் சேர்த்து ஹேமலதாவின் வயலின் நிர்ணயமாகத் தொடர்ந்து வர, அவரது தனி வாசிப்பும் தனி முத்திரை பதித்தது.

மோஹன ராக கீர்த்தனை 'நன்னு பாலிம்ப'வா அல்லது அருகேயே இருந்த 'கபாலி'யா என்று ரசிகர்கள் யூகிக்க முயன்றுகொண்டிருந்தபோது 'வருக வருகவே' என்று திருமலை உறைந்திடும் கருமுகிலை அழைத்துப் பாடினார் காயத்ரி. எம்.எஸ். பதிவில் 'ஹிட்' ஆன அம்புஜம் கிருஷ்ணா பாடல். 'மோஹன முறுவல் முகம் கண்டு, பிறவி சோகம் தவிர்க்கும்...' என்ற வரி, கிரவலுக்குச் சற்று நீளமானதுதான். ஆனாலும் சளைக்காமல் சவாலாக எடுத்துக்கொண்டு பாடினார் காயத்ரி.

அதே மேடையில் விருது பெற்ற மிருதங்கக் கலைஞர் கணபதிராமன் உற்சாகத்தின் உச்சத்தில் புகுந்து விளையாடிவிட்டார்.

* கணபதிராமன், அநிருத் ஆத்ரேயா,





★ தினமணி ஆசிரியர் கே. வைத்தியநாதன்

தூண்டுகோல் 'கல்கி' எழுத்துக்களே. 'கல்கி'யைப் பார்க்க வாய்ப்பில்லை; அவருடன் பேச வாய்ப்பில்லை; அவருடன் பணியாற்ற வாய்ப்பில்லை என்ற நிலையில், 'கல்கி' அவர்களின் நேரடி சீடர் சாவியிடம் வேலைக்குச் சேர்ந்து, திருப்திப்பட்டுக் கொண்டேன்'' என்றார்.

''நாம் அனைவரும் நமது பண்பாடு என்ன என்பதை உணரவேண்டும். இந்தப் பின்னணியைத் தெரிந்து கொள்ளாதவன், கட்டுப்பாடின்றி தவறுகளைச் செய்வான்'' என்றார் வைத்தியநாதன். விருதுகள் பெறும் காயத்ரியையும், கணபதி ராமனையும், மனம் நிறைய பாராட்டிய தினமணி ஆசிரியர், கடைசி வரை இருந்து கச்சேரியை மகிழ்ச்சி ததும்ப ரசித்துச் சென்றார்!

'எந்த பிரசங்கமும் முக்கால் மணி நேரத்துக்கு மேல் நீளக் கூடாது என்பதாக நமது காருண்ய கவர்மெண்டார் ஒரு சட்டம் கொண்டுவரும் பட்சத்தில் அதை நான் முழுமனதுடன் ஆதரிக்கத் தயாராக இருக்கிறேன்' என்று 'பிரசங்கமும், பிரசங்கிகளும்' என்ற கட்டுரையில் கல்கி எழுதினார். ''பிரசங்கமா..? பிரசங்கம் உட்பட விருது வழங்கும் நிகழ்ச்சி மொத்தத்தையும் முடிக்க, எங்களுக்கு முக்கால் மணி நேரம் போதும்'' என்று முடித்துக் காட்டினர் அறக்கட்டளையினர்!

**- கௌசி**

அட்டை, படங்கள் : **ஸ்ரீஹரி**

மோஹனத்தில் பளீர் பளீரென்று சொல் பேசிய அவர் விரல்கள், அடுத்து வந்த ஆனந்த பைரவியில் [ஓ ஜகதம்பா] அமர்த்தலான வாசிப்புக்கு அழகாக மாறின. கணபதி ராமனைப் போலவே மூக்குக் கண்ணாடி அணிந்திருந்த 'கல்லூரிக் கலைஞர்' அநிருத் ஆத்ரேயா அவரைப் போலவே வாசிப்பிலும் வேறுபாடுகள் காட்டி மகிழ்வித்தார். போகீந்த்ர சாயினம் என்ற தாள மாறுபாடுகள் கொண்ட குட்டி கீர்த்தனையை இந்த இருவருக்காகவே காயத்ரி தேர்ந்தெடுத்தாற்போல் இருந்தது. திஸ்ர நடைக்கு மாறிய இடங்களில் ஏகக் குஷிதான்!

கே. காயத்ரி, ஹேமலதா



பிரதான ராகமாக சிம்மேந்திர மத்யமம் பாடி குஹசரவணபவ சிவ பாலா [பாபநாசம் சிவன்] எடுத்தாண்டார் காயத்ரி. மீண்டும் அவர் மின்னல் குரல் கார்வை, பிர்கா, சங்கதிகள் என்று காம்பினேஷன் அமைத்து முன்னேறியது.

தொடர்ந்த தனியாவர்த்தனத்தில், கணபதி ராமன் ஒரு ரவுண்டு அஸ்திவாரம் கட்ட, அதன் மேல் அநிருத் தளம் போட, கூட கோபுரங்களான முத்தாய்ப்பை இருவரும் சேர்ந்து வழங்கி மகிழ்வித்தனர்.

தமது குரு சுகுணா புருஷோத்தமன் இயற்றிய பாடலுடன், அமரர் கல்கியின் இரு பாடல்களையும் [பிருந்தாவனத்தில் கண்ணன் வளர்ந்த, மறவேனே எந்நாளிலுமே] பாடி நிறைவு செய்தார் கே.காயத்ரி.

இனிமையும் பொலிவும் மிக்கதொரு கச்சேரி கேட்ட திருப்தி ரசிகர்களுக்கு! இசையின் புன்னகையாக இனித்தது அந்த ரம்மியமான மாலை.

**- லக்ஷ்மி மோகன்**



''வேறு ஒன்றுமில்லை. நீங்கள் போதைக்கு அடிமையாகிவிட்டீர்கள்'' என்கிறார் டாக்டர் சி.நடேசன்.

மதுவகைகளைத் தொட்டுப் பார்த்ததுகூட இல்லை. அருகில் யாராவது புகை பிடித்தாலே எனக்கு இருமல், தும்மல் எல்லாம் வந்துவிடும். என்னை எப்படி போதைக்கு அடிமையென்று சொல்லலாம் என்று யோசிக்கிறீர்களா?

''ஆமாம்... காஃபியில் உள்ள காஃபின் அல்லது டீயில் உள்ள டீனின் இதில் எதுவோ ஒன்று உங்களைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறது. அதன் அளவு குறைந்ததும் எங்கே காஃபி அல்லது டீ என்று உங்கள் கண்களைத் தேடச் செய்கிறது.

சரி... அதனால் என்ன?

# காஃபி விஷம்...

**கா**லை எழுந்தவுடன் உடலும் மனமும் செயலிழந்துபோன செல்ஃபோனாய் படுக்கையில் கிடக்கின்றன. சூடாக ஒரு காஃபி குடித்தால்தான் மூளை ரீ-சார்ஜ் ஆகி ஒத்துழைக்க உடன்படுகிறது.

பால் பாக்கெட் வரவில்லை. கிச்சனில் காஃபி பவுடர் இல்லை என்று ஏதாவது தடங்கல் என்றால் எக்கச்சக்கமாக கோபம் வேறு வருகிறது.

இதற்கெல்லாம் என்ன காரணம்?

அதுவொன்றும் கெட்ட பழக்கமில்லையே என்று உங்களுக்கு நீங்களே சமாதானம் சொல்லிக் கொள்ளாதீர்கள். மதுவகைகளைப் போலவே காஃபியும் டீயும்கூட உடல்நலக் கேடுகளை உருவாக்குகின்றன'' என்று எச்சரிக்கிறார் டாக்டர் நடேசன்.

காஃபி, டீ குடிப்பதால் அதன் வெப்பம் பற்களை நேரடியாகப் பாதிக்கிறது. ஈறுகளில் புண் உண்டாகவும் வாய்ப்பிருக்கிறது. நாக்கில்கூட புண் வரலாம்; உணவுக்குழல், இரைப்பை என்று அது

சுற்றிவரும் பாதையெங்கும் புண் வர வாய்ப்பிருக்கிறது.

இதயம் ஒரு நிமிடத்துக்கு 72 தடவை துடிக்கிறது. ஆனால், காஃபி, டீ... குடிக்கும்போது இதன் அளவு கூடலாம். இந் நிலைக்கு 'அரித்மியா' என்று பெயர். அருந்தாத சமயங்களில் இதயம் துடிக்கும் அளவு குறையவும் செய்யலாம். லப் டப், லப்டப் என்று தொடர்ந்து துடிக்கும்போது இடையிடையே கொஞ்சம் மௌனமாகிவிடும். இதற்கு 'எப்டோபிக்' என்று பெயர். இந்த இரண்டு நிலைகளுமே இதயத்துக்குக் கேடானவை.



★ டாக்டர் சி. நடேசன்.

மேலும், சூடாக பானங்கள் அருந்தும் போது இரத்தக் குழல்கள் விரிவடைகின்றன. இதுதான் உடனடி சுறுசுறுப்புக்குக் காரணம். இந்த மாற்றம் அடிக்கடி நிகழ்வது சருமத்தையும் பாதிக்கிறது.

எது குறைவான தீங்கு?

''காஃபியைவிடவும் டீ கொஞ்சம் பரவாயில்லை'' என்கிறார் நடேசன். டீ குடிக்கும்போது புற்றுநோயைக் கட்டுப்படுத்தும் திரவங்கள் உடலில் அதிகளவு சுரக்கின்றன.

அப்படியென்றால், பரீட்சைக்குப் படிக்கும் பிள்ளைகளோடு விடிய விடிய விழித்திருந்து, மணிக்கொரு தடவை தேநீர் கலந்து கொடுப்பது சரியா தவறா என்று தாய்மார்கள் கேட்கலாம்.

''காஃபி, டீ குடித்தபின் உண்டாகும் திமிர் உற்சாகத்தில் படிக்கிற பிள்ளைகள், படித்ததை மறுநாள் காலை தேர்வில் எழுதுவார்களா என்பது சந்தேகம்தான். சுடுநீர் மட்டும் கொடுங்கள். அது உடலிலுள்ள திரவக்கழிவுகள் வெளியேறுவதை எளிதாக்கி, உடலுக்குப் புத்துணர்ச்சி கொடுக்கும்'' என்கிறார் டாக்டர் நடேசன்.

# டீ போதை!

சின்னக் குழந்தையாக இருக்கும்போது ஆரம்பித்த பழக்கம் இது. எப்படி உடனே இதை விட்டுவிட முடியும் என்று கேட்டவர்களுக்கு ஒரே பதில்தான்.

சுவைக்கு உங்கள் நாக்கை அடிமையாக்கிக் கொள்ளாதீர்கள். நாக்கும் சுவையும் எப்போதும் உங்களுக்கு அடிமையாக இருக்கட்டும்.

குடிப்பழக்கம் இருப்பவர்களுக்கு கொஞ்ச நேரம் கன்னங்கள் உப்பி, பிறகு சுருங்கிவிடுவது போல காஃபி, டீ அருந்துபவர்களுக்கும் ஆகிவிடும்.

சூடாக வெந்நீர் குடித்தாலே போதுமானது. அதுவே காலைக்கடன்களைத் தூண்டிவிடும். காஃபியோ, டீயோ குடிப்பதால்யே அதிகாலை சமாச்சாரங்கள் சுலபமாகிவிடுவதில்லை. அவற்றிலுள்ள சுடுநீரே அதற்குக் காரணம்.

காஃபி, டீ இரண்டுமே தீங்கான பழக்கவழக்கங்கள் என்றால் இரண்டில்

இதெல்லாம் முடியுமா என்பவர்களுக்கு டாக்டர் சி.நடேசனே ஒரு முன்னுதாரணம்... ஆமாம் அவர் இதுவரை காஃபி, டீ இரண்டையுமே அருந்தியதில்லை.

நாமும் கொஞ்சம் முயற்சி செய்துதான் பார்ப்போமே...



**- எஸ்.பி.என்.**



# கல்கி




2008 செப்டெம்பர் 21
ஸர்வதாரி புரட்டாசி 5
மலர் : 67
இதழ் : 8


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## நீதிக்குச் சவால் விடும் ஸென்!

"நீதித் துறையிலும் லஞ்ச - ஊழல் புகுந்துவிட்டது" என்று உச்சநீதிமன்ற தலைமை நீதிபதியே சமீபத்தில் வருத்தப்பட்டார். அவரது கருத்தையும் நமது அதிர்ச்சியையும் பன்மடங்கு அதிகரித்துள்ளது கல்கத்தா உயர்நீதிமன்ற நீதிபதி ஸென் விவகாரம்!

ஸென் வழக்குரைஞராக இருந்த காலகட்டத்தில் இரு பொதுத்துறை நிறுவனங்களுக்கிடையே வழக்கு நடந்திருக்கிறது. அவற்றுள் ஒன்றிற்கு வந்த 33,22,800 ரூபாய் வருவாயினை, ஸென் பாதுகாப்பாக வைத்துக்கொள்ளும்படி நீதிமன்றத்தால் பணிக்கப்பட்டார்.

ஆனால் ஸௌமித்ரா ஸென்னோ, அந்தப் பெருந்தொகையைத் தமது சொந்த வங்கிக்கணக்கில் செலுத்தி, பயன்படுத்தியுமிருக்கிறார்! அவர் நீதிபதி ஆக்கப்பட்ட பிறகும் தொகையைச் சிறிது காலத்துக்கு அனுபவித்திருக்கிறார்! கண்டுபிடிக்கப்பட்ட பிறகு, தொகையைத் திருப்பித் தந்துள்ளார்; ஆனால், அவர் நடந்துகொண்டவிதம் சரியில்லை என்று விசாரணையில் மறுபடி நிரூபணமானது. மேல்முறையீடும் இதையே உறுதிசெய்தது. உச்சநீதிமன்ற தலைமை நீதிபதி கே.ஜி.பாலகிருஷ்ணன் கேட்டுக்கொண்டபோதிலும், ராஜினாமா செய்ய மறுத்துள்ளார் ஸென்!

நீதியின் காவலர்களாக விளங்கவேண்டியவர்கள் அடாவடியாக




அநீதி செய்வேன் என்று அடம்பிடிக்கும் அக்கிரமம் இது!

ஒரு நீதிபதியை அரசு பதவியிலிருந்து நீக்கமுடியாது என்பதால், நீதிபதி கே.ஜி. பாலகிருஷ்ணன், ஸென் மீது நாடாளுமன்ற நடவடிக்கை தொடர்ந்து, தீர்மானம் மூலம் அவரைப் பதவியிலிருந்து நீக்குமாறு அரசுக்கு ஆலோசனை வழங்கியுள்ளார்.

நீதி பரிபாலனம் செய்பவர்கள் தங்கள் கடமையில் தவறுவதும் தவறிழைப்பதுமே கொடுமை. ஆனால், நாம் ஸென் விவகாரத்தில் காண்பதோ ஒரு கிரிமினல் குற்றத்தையே இழைத்துவிட்டு, அதனை நியாயப்படுத்தவும் முயற்சி செய்கிற ஒரு வன்கொடுமையை.

வழக்குகள் தேங்கிப் போவது, காலம் கடந்து நீதி வழங்கப்படுவது, அங்கங்கே எட்டிப் பார்க்கும் லஞ்ச - ஊழல் என்பன நீதித் துறையைத் தலைகுனியச் செய்யும் விஷயங்கள். நீதிபதி ஒருவர் சட்டம் - நீதி என்ற இரண்டையும் மீறத் துணிந்ததோ நாட்டுக்கே தலைகுனிவு; பெரிய அவமானம்.

ஒருசில நீதிபதிகள் இவ்வாறு தரம் தாழ்வதால்தான் வழக்குரைஞர்களுக்கும் அடாவடி, அராஜகம் செய்யத் துணிவு பிறக்கிறதோ, என்று தோன்றுகிறது.

மக்கள், அறியாமையினால் தவறான நபர்களைத் தேர்வு செய்து ஆட்சியில் அமர்த்தினால்கூட, நீதித்துறை நேர்மையாகவும் தீரத்துடனும் இயங்கினால் தேசம் பிழைத்துவிடும். ஆனால், மெத்தப் படித்தவர்கள், நீதியின் காவலர்கள் சூதும் வாதும் செய்தால், யாரிடம் முறையிடுவது; எப்படித் தீர்வு பிறக்கும்!? அரசியல்வாதிகளுக்கும் நீதித்துறையை எதிர்க்கும் துணிவுதான் பிறக்கும். நல்லவேளையாக தலைமை நீதிபதி விரைந்து தமது ஆணையைப் பிறப்பித்ததால், நீதித்துறையிடம் மக்களின் நம்பிக்கை முற்றிலும் தகர்ந்துபோகாமலிருக்கிறது.

நல் மரபுகளை மீட்டெடுக்கும் ஓர் இயக்கத்தை, நீதித்துறையே தொடங்கட்டும். அந்த வேள்வியின் தகிப்பில் அரசியல் வட்டாரமும் தூய்மையடையும். ○



* இரா. ரமேஷ்

# அர்த்தமுள்ள அங்கீகாரம்

அமரர் கல்கி சிறுகதைப் போட்டியில் முதல் மூன்று பரிசு பெற்ற, படைப்பாளிகளைப் பற்றிய விவரங்களைப் பகிர்ந்துகொண்டு, வாசகர்களோடு சேர்ந்து வாழ்த்துவதில் பெருமை கொள்கிறோம். - ஆர்.

**இரா. ரமேஷ் (முதல் பரிசு)**

திருவாலங்காட்டைச் சேர்ந்தவர். சென்னை பல்கலைக்கழகத்தில் வணிகவியல் பட்டம் பெற்று, சுருக்கெழுத்தாளராய் மதுரை வருமானவரித் துறையில் பணிபுரிகிறார். மூன்று கதைகள் எழுதி, மூன்றும் பிரசுரமாகி அதில் இரண்டு கதைகள் பரிசைத் தட்டி வந்திருக்கின்றன. வெற்றியின் துவக்கத்தோடு நகரும் இவருக்கு மனைவி ஜெயா, குழந்தைகள் ஸ்ரீநிதி, வைபவி ஆதார அம்சங்கள்.

**செய்யாறு. தி.தா.நாராயணன் (இரண்டாம் பரிசு)** - செய்யாற்றில் வசிக்கும் இவர் அரசு மருந்தாளுனர் பணியிலிருந்து ஓய்வுபெற்றவர். ஓய்வு பெற்ற ஆசிரியரான தன் மனைவியே முதல் வாசகியும் ஆலோசகருமாவாரென அறிவிக்கும் தி.தா.நாராயணன், 1999-ல் அமரர் கல்கி நூற்றாண்டு விழாப் போட்டியில் ரூ. 25,000/- முதல் பரிசு வென்றவர். விவசாயப் பிரச்னைகளை மையமாக்கி, கதை புனையும் தீவிரத்தில் இருக்கிறார்.



* செய்யாறு. தி.தா. நாராயணன்

**தஞ்சாவூர்க் கவிராயர் (மூன்றாம் பரிசு)** - தஞ்சாவூர் கோபாலி என்ற புனைபெயரில் 1975 முதல் எழுதி வருகிறார். தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முதல் துணைவேந்தரான டாக்டர் திரு. வ.அய். சுப்பிரமணியத்தின் தனிச்செயலராகப் பணிபுரிந்து, தற்போது அரசுத்துறை தணிக்கையாளராக இருக்கிறார். வயது 51. தஞ்சை பிரகாஷ் இவரின் இலக்கிய ஆசான். ''கல்கியின் பரிசு எனக்குக் கிடைத்திருப்பது பெரிய அங்கீகாரம்'' என்று சொல்கிறார் கவிராயர்.



* தஞ்சாவூர்க் கவிராயர்

நவராத்திரி
கொண்டாட்டமாய்...

இறையருளை ஆனந்தப்
பரவசத்தோடு அள்ளித்தர...

சுதா சேஷய்யன் எழுதும்

# ஸ்ரீ லலிதா

பாகம் - 3

ஆன்மிகத் தொடர்

28.09.2003 **கல்கி** இதழில்
துவங்குகிறது



# நில்... கவனி... ~~செல்!~~ கொல்!

'நான் செல்ல நினைத்த இடம் எது? இப்போது வந்துசேர்ந்திருக்கும் இடம் எது? எந்த சக்தி என்னை இங்கே அழைத்து வந்தது?' பவித்ரா வியப்பின் வசப்பட்டாள்.

'சித்தப்பா வீட்டுக்குக் கிளம்பி விட்டு, இறங்கவேண்டிய ஸ்டேஷனுக்கு முந்தைய ஸ்டேஷனிலேயே ஏன் இறங்கினோம்? ஷிப்ரா இறந்த இடத்துக்கருகே வந்து எதற்காக நிற்கிறோம்?'

அவள் எதிரே நீண்டுகிடந்த தண்டவாளங்கள் அவளிடம், 'எங்களின் முடிவைக் கண்டுபிடித்துவிடலாம். ஆனால் எங்களுக்கு நடுவில் விழுந்து மறைந்த உன் தோழியின் மர்மத்தை உன்னால் முடித்துவைக்க முடியுமா?' என்று கேட்பதுபோல இருந்தன.

சித்தப்பாவின் தொலைபேசி எண்ணைத் தொடர்புகொண்டாள். ''ஸாரி சித்தப்பா, திடீர்னு வேற ஒரு வேலை வந்திடுச்சு. முடிச்சுட்டு அரைமணி நேரத்திலே அங்கே வரேன்'' என்றாள்.

தண்டவாளத்தை மீண்டும் பார்த்து, கண்களாலேயே ஷிப்ராவுக்கு அஞ்சலி செலுத்தினாள். பிறகு சுற்றுமுற்றும் பார்த்தாள். வேர்க்கடலை விற்கும் குணசுந்தரியைக் காணோம்.

''என்னக்கா, சுந்தரி அக்காவைத் தேடறியா?'' என்று கேட்டாள், அங்கு நடைபாதை ஓரமாக பூ விற்றுக் கொண்டிருந்த ஒருத்தி. போன முறை குணசுந்தரியோடு தான் பேசியதை இவள் தொலைவில் இருந்து கவனித்திருக்க வேண்டும்.

ஆமாம் என்று பவித்ரா தலையசைத்தவுடன், ''அதோ இருக்குதே... அதுதான் அவ குடிசை'' என்று சுட்டிக்காட்டினாள்.

குடிசைக்குள் நுழைவதற்கு முன்பாகவே பவித்ராவின் கவனம் வாசலில் உட்கார்ந்திருந்த சிறுவன் மீது பதிந்தது. ஐந்து வயதுதான் இருக்கும். கையில் இருந்த பாடப் புத்தகத்தை உற்சாகமாக வாய்விட்டுப் படித்துக் கொண்டிருந்தான். 'பரவாயில்லையே, இந்தச் சின்ன வயதிலேயே விடுமுறை நாளில் கூட பாடம் படிக்கிறானே.'

பவித்ரா நெருங்கியதும் அந்தச் சிறுவனின் தலை நிமிர்ந்தது. முகமலர்ச்சியுடன் 'வாங்க ஆன்ட்டி, அம்மாவைப் பார்க்கணுமா? உள்ளேதான் இருக்காங்க' என்றான்.

பவித்ரா இந்த அழகான வரவேற்பை எதிர்பார்க்கவில்லை. அவன் கன்னத்தை லேசாகக் கிள்ளிவிட்டு உள்ளே நுழைந்தாள்.

குணசுந்தரி படுத்துக்கொண்டிருந்தாள். சில நொடிகளுக்குப் பிறகுதான் பவித்ராவை அடையாளம் கண்டுகொண்டாள். ''வாங்கம்மா.. என்னம்மா, நீங்க போய்

என் குடிசைக்கெல்லாம் வந்திருக்கீங்க...! ரொம்பக் காய்ச்சல். அதுதான் வெளியே போய் கடலை விக்காம இப்படிப் படுத்துக் கிட்டிருக்கேன்'' என்றவாறு எழுந்து உட் கார்ந்தாள்.

அங்கிருந்த ஒரு மர ஸ்டூலில் சுவாதீன மாக உட்கார்ந்தாள் பவித்ரா. சட்டென

# அருணா சரண்யா

விஷயத்துக்கு வந்தாள். ''ஷிப்ரா இறக்கும் போது கையிலே ஒரு செல்ஃபோனை வச்சிருந்தாளே, அது எனக்கு ரொம்ப தேவைப்படுதுங்க. அதன் மூலம் ஒரு முக்கியமான விவரம் கிடைக்கணும்.''

''என்னைக் கேட்டா? நான் எதையும் எடுத்து வச்சுக்கலே'' என்று அவசரமாகப் பதிலளித்தாள் குணசுந்தரி. அந்த அவசரத் தில் ஒரு செயற்கைத்தன்மையும் பொய் மையும் இணைந்திருந்ததாகப்பட்டது பவித்ராவுக்கு.

''நான் ஒண்ணும் அந்த செல்ஃபோன் உங்ககிட்ட இருக்குன்னு சொல்லலையே.''

''அந்த இன்ஸ்பெக்டரு இந்த செல் ஃபோன் பற்றி என்னைக் குடைஞ்சு எடுத் தார். இப்போ நீங்களும்.''

ஓ, விக்ரம்! பேச்சை மாற்றினால் நல் லது என்று தோன்றியது பவித்ராவுக்கு.

''வாசல்லே இருப்பது உங்க மகனா? ரொம்ப சமர்த்தா, மரியாதை தெரிஞ்ச வனா இருக்கான்'' என்றாள் மனப்பூர்வ மாக.

8

''என்ன இருந்து என்னம்மா செய்ய? ரெண்டு வருஷத் துக்கு முன்னாலே என் வீட்டுக்காரரு கடன் காரங்க தொல்லை தாங்கமுடியாம வீட்டை விட்டே ஓடிட் டாரு. இவனை இங் கிலீஷ் ஸ்கூலிலே படிக்க வைக்கணும்னு ஆசை. ஆனா கவர்ன் மெண்டு ஸ்கூலுலேகூட

திகில் தொடர்கதை

**"பூ**வா தலையா' படத்தின் டிரைலரில் உதயா, கிருஷ்ணா... இருவரின் நடிப்பையும் பார்த்தபோது, எனக்கு 'சிவப்பு மல்லி' படம் தான் ஞாபகம் வந்தது. இருபது வருடங்களுக்கு முன்பு வெளிவந்த அந்தப் படத்தில் விஜயகாந்தும், சந்திரசேகரும் இவர்களைப் போல அன்று அறிமுகமானவர்கள். இன்று அவர்களின் வளர்ச்சி அளவை நான் சொல்லித்தான் தெரியவேண்டும் என்பதில்லை. இதுபோன்ற இளைஞர்களின் வரவுதான் தமிழ்ச் சினிமாவை அடுத்த கட்டத்தை நோக்கி நகர்த்தும். சில பேர் எதையாவது சொல்லிக் கொண்டேயிருப்பார்கள். ஆனால், ஒன்றும் செய்யமாட்டார்கள். இந்தப் படத்தின் இயக்குநர் சஞ்சய்ராம், எதையும் சொல்லமாட்டார். ஆனால், தொடர்ச்சியாகப் படங்களைக் கொடுத்துக் கொண்டேயிருக்கிறார். சில நேரங்களில் அவரை நினைத்தால் எனக்குப் பொறாமையாகக்கூட இருக்கும்" என்று இப்படத்தின் இசை வெளியீட்டு விழாவில் பேசினார் தயாரிப்பாளர் சங்கத் தலைவர் இராம. நாராயணன்.

இயக்குநர் சஞ்சய்ராமிடம், "'பூவா தலையா' பழைய படத்தின் தலைப்பல்லவா?" என்றபோது, "ஜெய்சங்கர், ஜெமினி நடித்த சூப்பர் ஹிட் படம்தான் 'பூவா தலையா'. தலைப்பை மட்டும்தான் எடுத்திருக்கிறோம். மற்றபடி அந்தப் படத்தின் கதைக்கும் இந்தப் படத்துக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. ஓர் அரிவாள் மீது பட்டாம்பூச்சி உட்காரும்போது, அரிவாள் பட்டாம்பூச்சியின் மென்மையையும், பட்டாம்பூச்சி அரிவாளின் வன்மையையும் உள்வாங்கிக் கொண்டால் என்னவாகும் என்னும் அழகான கற்பனைதான் இந்தப் படம்" என்கிறார்.

- ஷீபா



படிக்க வைக்க முடியுமான்னு தெரியலே."

பவித்ராவுக்குத் துடிப்பு ஏற்பட்டது. "படிக்க வக்காம இருந்திடாதீங்க. அவனுக்கு ஸ்கூலுக்கு ஆகற எல்லா செலவையும் நான் ஏத்துக்கறேன். எனக்குத் தெரிஞ்ச ஒரு ட்ரஸ்ட் இருக்கு. அவங்ககிட்ட பேசி அவனுக்கான சீருடை மாதிரி விஷயங்களுக்கு ஏற்பாடு செய்யறேன். இனிமே அவனுடைய படிப்பைப் பத்தி நீங்க கவலைப்பட வேண்டாம்" என்று கூறிய பவித்ரா, 'ஒரு நிமிஷம்' என்றபடி சட்டென்று வெளியேறினாள். ஐந்து நிமிடங்கள் கழித்து அவள் மீண்டும் அந்தக் குடிசைக்குள் நுழைந்தபோது, அவள் கையில் சில பொருட்கள் இருந்தன.

பிஸ்கெட் பாக்கெட்டை அந்தச் சிறுவனிடம் கொடுத்தாள். "இந்தாங்க இந்த மாத்திரைகளை வேலைக்கு ஒண்ணா போட்டுக்குங்க. காய்ச்சல் நின்னுடும். இது என் விலாச அட்டை. ஏதாவது தேவைன்னா என்னை வந்து பாருங்க" என்று அவளிடம் நீட்டினாள்.

குணசுந்தரி பிரமிப்பும் சங்கடமுமாக அவளைப் பார்த்தாள். பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவளைப் போல தள்ளாடியபடி எழுந்தாள். குடிசைக்குள் இருந்த ஒரு சிறிய தடுப்புக்குப் பின்னால் சென்றாள்.

மூன்று நிமிடங்களுக்குப் பிறகு மீண்டும் வந்து, ''என்னை மன்னிச்சுக்கம்மா'' என்ற படி பவித்ராவை நோக்கி அந்த செல்ஃபோனை நீட்டினாள்.

ஷிப்ராவின் செல்ஃபோன். பவித்ரா அதை கிட்டத்தட்ட பிடுங்கிக்கொண் டாள். கடைசியாக யாரிடம் இருந்து ஷிப்ராவுக்கு தொலைபேசி அழைப்பு வந்தது? அவர் கூறிய எந்தத் தகவலால்



* '[illegible]' படத்தில்...

மனம் உடைந்து ஷிப்ரா நிலை குலைந்தாள்? இரண்டாவது கேள்விக்குப் பதில் கிடைக்க வேண்டுமானால், முதல் கேள்விக்குப் பதில் வேண்டும். இதோ அந்தப் பதில் தன் கையில்.

''**அ**ப்பா, உங்க செல்ஃபோன் சார்ஜரைக் கொடுங்க.'' வீட்டுக்குள் நுழைந்த அடுத்த கணமே பவித்ரா பரபரத் தாள். அப்பாதான் ஷிப்ராவின் செல் ஃபோன் போன்ற ஒன்றை வைத் திருக்கிறார்.

''எதுக்காக இதைக் கேட்கிறே?'' என்று கேட்டபடியே கொடுத்தார் ஈஸ்வரன்.

பதிலளிக்காமல் அந்த சார்ஜர் மூலமாக ஷிப்ராவின் செல்ஃபோனுக்கு மின்னி ணைப்பு கொடுத்துவிட்டு, தவிப்புடன் காத்திருக்கத் தொடங்கினாள்.

''ஏம்மா, தினமும் பேப்பர்லே வரும் க்ராஸ்வேர்ட் கட்டங்களை நிரப்புவியே. இப்பல்லாம் ஏன் அதைச் செய்றதில்ல? வாழ்க்கையிலே சின்னச் சின்ன சந்தோஷங் களையெல்லாம் விட்டுடக் கூடாதும்மா'' என்றார் ஈஸ்வரன்.

பவித்ரா பதிலளிக்கவில்லை. அந்த அறையிலிருந்த தொலைக்காட்சியில் குறுக் கெழுத்து நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றுக் கொண்டிருந்தது.

''இடமிருந்து வலம் - ராணுவத்துக்குப் பழக்கப்பட்ட மாதம். இதற்கான விடை மூன்று எழுத்து கொண்டது. மேலிருந்து கீழ் விடைக்கான குறிப்பு - பெரிய பெரிய உறவு. இந்த விடையில் உள்ள எழுத்துக் கள் இரண்டு'' என்று நிகழ்ச்சியை நடத்து பவர் கூறிக்கொண்டிருந்தார்.

''பெரிய உறவுன்னா அம்மா. அப்போ அந்த விடை 'மாதா'. சரிதானே?'' என்று கேட்டார் ஈஸ்வரன்.

சட்டென பதிலளித்தாள் பவித்ரா. ''இல்லப்பா. 'பெரிய'ங்கற வார்த்தையை இரண்டு தடவை கொடுத்திருக்காங்க. 'பெரிய'ங்கறதுக்கு இன்னொரு வார்த்தை 'மா'. அதனாலே 'மாமா'ங்கறதுதான் விடை.''

''அப்போ அந்த இன்னொரு வார்த்தை என்ன?''

''மார்ச்'' என்றாள் பவித்ரா.

செல்ஃபோன் மெல்ல மெல்ல உயிர் பெற்றுக்கொண்டிருந்தது.

**(திக்திக்)**

**தமிழ்மணவாளன்**

# வானின் புன்னகையாய் வரைந்த வாழ்வு...

**உ**லகின் பல்வேறு பகுதிகளில் வாழும் சிறந்த படைப்பாளிகளின் கதைகளைத் தொகுத்து 'வானவில் கூட்டம்' என்னும் தலைப்பில் அன்னை இராஜேஸ்வரி பதிப்பகத்தார் வெளியிட்டிருக்கின்றனர். கதைத் தேர்வில் துல்லியமான அளவீட்டைக் கொண்டு செயல்பட்டிருக்கும் தொகுப்பாசிரியர் பா. உதயகண்ணன் பாராட்டுக்குரியவர்.

வானின் புன்னகையான வானவில் போல், வாழ்வின் திரண்டு போகும் பல்வேறு தளங்களின் பாதைகளில் பயணிக்கிற சிறுகதைகள். தொகுப்பில் மொத்தம் 37 கதைகள் உள்ளன.

இந்நூலுக்கு, திரைப்பட இயக்குனர் பாலுமகேந்திராவின் முன்னுரை விசேஷமானது.

வாழ்வெங்கும், நமக்குள்ளும், நம் எதிரேயும் ஒளிந்துள்ள கதைகள். வெறும் கதைகளல்ல. காலத்தின் சாட்சியங்களாக இருக்கின்றன.

1. நட்பின் நுட்பமான நெகிழ்வை எளிய மொழியாடலில் பேசும் நாஞ்சில் நாடனின் கதை.

2. நூலகத்தின் மீதான அவதானிப்பும், இளவயதில் அதன்பால் உருவாகும் ஈர்ப்பும் 'ஒரு லைப்ரரியின் மரணம்' கதையின் கதைக் கருவாகிறது. இக்கதையைக் கொண்ட சூர்யராஜனின் கதைத் தொகுப்பு பரிசுகளையும் பெற்றது என்பது கவனத்துக்கு வருகிறது.

3. லைராவின் அழகு - பேரழகு. பெண்ணின் பேரழகைத் தாங்கமுடியாத சகமனிதர்களின் மனோபாவம், அவளுக்கு எதிராகிப்போவதின் சாத்தியத்தைக் காட்டும் அ. முத்துலிங்கத்தின் 'பூங்கொத்து கொடுத்த பெண்'.

4. தன்னைப் பிடித்துத்தந்த ரோணியைக் காணவரும் - இன்னா செய்தாரை நாணச் செய்யும் - துரைசாமியை உலவவிடும், 'வீட்டுக்கு வந்தார்' என்னும் இந்திரஜித் எழுதிய சிறுகதை.

5. எஸ்.ஷங்கரநாராயணன் எழுதிய 'காலடித் தடங்களற்ற ஓர் உலகம்'.

6. கவிதைகள் சிலவற்றை பொருத்தப்பாட்டுடன் காட்டும் கே.ஆர். மணி எழுதிய 'கழிப்பறைக் காதல்'.

7. ரோஜாவின் வரலாறாய் புதிய புத்திையுடன் கதை சொல்லும் தமிழ் மகனின் கதை என ஏழு கதைகளும், வாழ்வின் ஏழு வண்ணங்களை மனப்படுத்திய தன்றி வேறொன்றுமில்லை. மற்ற கதைகளும் இவற்றுக்கு நிகரானவையே.

மிகவும் அழகிய முறையில் உருவாகியிருக்கும் சிறந்த சமகாலச் சிறுகதைகளின் தொகுப்பாகிய இந்த நூலினை நண்பர்களின் சந்திப்பின்போதும், விழாக்களிலும் பரிசாக வழங்கலாம்.




***இருவாட்சி இலக்கியத் துறைமுகம்,***
***41, கல்யாண சுந்தரம் தெரு,***
***பெரம்பூர், சென்னை - 11.***
***விலை ரூ. 180. பக்கங்கள் 344***

# முஸ்லீம்களுக்கு ஹிந்து பெயர்!

## இயக்குநர் மதுமிதா பேட்டி

''இந்தோனேஷிய தமிழ்ச் சங்கத்தில் திரையிடப்பட்ட முதல் தமிழ்ப்படம் இதுதான்'' என்று குதூகலமாகப் பேச்சைத் தொடங்குகிறார் இயக்குனர் மதுமிதா. பார்த்திபன், சாயாசிங் ஆகியோர் நடிப்பில் உருவான 'வல்லமை தாராயோ' என்ற திரைப்படத்தை இயக்கிய மதுமிதாவைச் சந்தித்தோம். அவரிடம் பேசியதிலிருந்து...

* மதுமிதா

''இந்தோனேஷியாவில் தற்போது வசிக்கும் தமிழ் மக்கள் மூன்றாவது தலைமுறையைச் சேர்ந்தவர்கள். அந்நாட்டின் சினிமா வளர்ச்சி என்பது வருடத்துக்கு ஐந்து முதல் ஆறு படங்கள் தயாராகும் அளவில் உள்ளது. இந்தியாவின் சார்பில் ஹிந்திப் படங்கள் மட்டும் எப்போதாவது அங்கே ரிலீஸாகும். தமிழ்ப்படங்களை சிங்கப்பூர் சென்றுதான் பார்ப்பார்கள் நம் தமிழ்மக்கள்.

தமிழ்ப்படங்களை அங்கே இந்தோனேஷிய மொழியில் சப்-டைட்டில் போட்டுத்தான் வெளியிடமுடியும். அதற்கு முன் அந்நாட்டின் சென்சார் குழுவுக்கும் திரையிடவேண்டும். இதுபோன்ற பல வரையறைகள் இருப்பதால் அங்கே நம் படங்களைத் திரையிட, யாரும் பெரிதாக ஆர்வம் காட்டுவதில்லை.

நான் படித்தது வளர்ந்தது எல்லாம் அங்கேதான். என் குடும்பத்தினர் இப்போதும் அங்குதான் வசித்து வருகிறார்கள். என் அப்பா பெரிய இண்டஸ்ட்ரியலிஸ்ட். 'வல்லமை தாராயோ' அங்கே திரையிடப்பட்ட பிறகு என்னை அங்கே நிறைய இந்தியர்களுக்கு அடையாளம் தெரிகிறது.

இந்தோனேஷியத் தமிழர்களுக்காக அங்கே தமிழ் மன்றம் ஒன்று செயல்படுகிறது. அதன் சார்பில் அடிக்கடி நிகழும் கலை நிகழ்ச்சிகளில் நான் நடித்திருக்கிறேன். ஆனால், டைரக்ஷனில் எனக்கு ஆர்வம் வந்தது, பள்ளிப் படிப்பை முடித்தபிறகுதான். பின், அமெரிக்காவில் சினிமா தொடர்பான படிப்பில் சேர்ந்

தேன். அதில் டைரக்‌ஷன் உள்பட சினிமா வின் சகலதுறைகள் பற்றியும் அறிந்து கொள்ளலாம். ஹாலிவுட் படங்களில் பணி புரியும் வாய்ப்பும் நமக்குக் கிடைக்கும். அப்படி 'பைரேட்ஸ் ஆஃப் தி கரீபியன்' படத்தில் மூன்று வாரங்கள் நான் பணிபுரிந் திருக்கிறேன். படிப்பை முடித்ததும் இயக் குனர் கௌதம்மேனனிடம் அசிஸ்டென் டாகச் சேர்ந்தேன்'' என்றவர் தொடர்ந்து,

''வல்லமை தாராயோ' எதிர்பார்த்த வெற்றியைப் பெறவில்லை என்பது உண்மை தான். அதே நேரத்தில் பொதுவாக எல்லா ரசிகர்களையும் கவர்ந்தது என்பதுவும் உண்மை. பல ரசிகர்கள் கதாபாத்திரத்தின் சூழ்நிலைக்கு ஏற்ப சிரித்து, அழுது கதையோடு ஒன்றிப் போனார்கள் என்பதை அவர்களின் திருப்தி யான முகமே எனக்கு உணர்த்தியது. படத் தைப் பார்த்துவிட்டு எஸ்.பி.முத்துராமன் ஸார் உள்ளிட்ட மூத்த இயக்குனர்கள் என் னைப் பாராட்டினார்கள். படத்தை, தேசிய விருது கமிட்டிக்கு அனுப்பச் சொல்லியும் எனக்கு அறிவுரை தந்தார்கள். கோவா உலகப் பட விழாவிலும் படத்தைத் திரையிடத் திட்ட மிட்டிருக்கிறேன். இன்னொரு விஷயத்தை யும் சொல்ல வேண்டும். 'ஆண் இயக்குனர் கள் பெண்களின் கதாபாத்திரத்தை தவறாகச் சித்தரிக்கிறார்கள்... நீங் களும் இப்படிச் செய்யலாமா?' என்று சாயாசிங் கதாபாத் திரத்தை நினைத்து ஒருவர் கேட் டார்.

படத்தில் நான் சாயாசிங் கேரக் டரைத் தவறாகச் சித்திரிக்க வில்லை. சிறு வயதிலிருந்தே ஒரு வனைத் தன் கணவனாக நினைத்து வாழ்ந்து வருகிற பெண்ணை, திடீரென்று வேறொருத்தருக்கு மணம் முடித்து வைக்கிறார்கள். அதற்குப் பின்னும் அவள் அவனை மறக்காமல் இருக்க, அவளைத் தவறாகப் பார்க்கிறது உலகம். ஆனால் அவளுக்கு, அவளது உணர்வை மதிக்காத மற்றவர் கள்தான் தவறாகப்படுகிறார்கள். இப்படிப்பட்ட கேரக்டர்கள் உல கம் முழுவதும் இருக்கிறார்கள். இன்னொரு விஷயம். பெண் களின் சிறப்பை வெளிப்படுத்தும் விதமாக எவ்வளவோ படங் களை ஆண் இயக்குனர்கள் தந் திருக்கிறார்கள் என்பதும் மறுக்க முடியாத நிஜம். 'வல்லமை தாரோயோ' படத்தைப் பார்த் துட்டு சிலர், 'உங்க தனிப்பட்ட வாழ்க்கைல இந்த மாதிரி பாதிப்பு ஏற்பட்டதா?'ன்னு கேட்டாங்க. ஒரு வகையில நிஜம். இது நான் நன்கு அறிந்த ஒருவரின் வாழ்க் கையில் நடந்த கதை.

பெண் இயக்குனர் என்ப தால் பெண்கள் சார்ந்த கதை களைத்தான் இயக்கணும் என்ற கட்டாயம் எதுவு மில்லை. ஒரு இயக்குனராய் எல்லாவிதமான படங்களை

உனது இரவுகளை நட்சத்திரங்களை வைத்து கணக்கிடு; நிழல்களை வைத்தல்ல!
உன் வாழ்க்கையை நீ செய்த புன்னகைகளை வைத்துக் கணக்கிடு; கண்ணீர்த் துளிகளை அல்ல!



யும் செய்யவேண்டும் என்பது தான் என் விருப்பம்'' என்று கூறும் மதுமிதா, தற்போது காமெடி மற்றும் ஆக்ஷனை மையமாகக் கொண்ட இரண்டு கதைகளை உருவாக்கி வருகிறார். இந்தோனேஷியாவிலும் இவரை இரண்டு படங்கள் இயக்கச் சொல்லிக் கேட்டிருக்கிறார்கள்.

''இந்தோனேஷியாவில் முஸ்லீம் மக்களுக்குக்கூட தர்மராஜ், லஷ்மி போன்ற ஹிந்துப் பெயர்கள் இருப்பது ஆச்சரியமான ஒன்று. 'பின்பற்றும் மதத்தில்தான் நாங்கள் முஸ்லீம்கள். வாழும் கலாச்சாரத்தில் நாங்கள் ஹிந்துக்கள்தான். இந்தியர்கள்தான்' என்று அதற்குக் காரணம் கூறுகிறார்கள் அவர்கள். இத்தனைக்கும் அவர்கள் பூர்வீகத்தில்கூட இந்தியர்கள் இல்லை. ஆனாலும் இந்தியாவுக்கும் இந்தோனேஷியாவுக்கும் பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே உறவுகள் இருந்தன என்று நம் சரித்திர நூல்கள் கூறுவதற்கு இந்நிகழ்வுகள் நல்ல சான்று'' என்கிறார் மதுமிதா.

– மேரி

* பைரேட்ஸ் ஆஃப் தி கரீபியன்





# உதட்டோரம்

‘புன்னகைக் குடையுடன் வெளியே புறப்படுங்கள்; உங்கள்மீது சந்தோஷச் சாரல் அடித்துக்கொண்டே இருக்கும்’ என்கிறது ஒரு சீனப் பழமொழி.

பல ஆண்டுகளுக்கு முன்னால் ஐரோப்பிய அலுவலகங்களில் ஒரு விசித்திரமான சட்டதிட்டம் நடைமுறையில் இருந்தது.

அலுவலகப் பணியாளர்கள் உயர் அதிகாரிகளைப் பார்க்கும்போது கட்டாயம் புன்னகை புரியவேண்டும். இல்லாவிட்டால் அலுவலகப் பண்பாட்டுக் குறைவுடன் நடந்துகொண்டதாகக் குற்றம் சாட்டப்பட்டு, தண்டனைக்கு உள்ளாக நேரிடும்.

சரித்திரத்தைப் பாருங்கள். சர்வாதிகாரிகள் புன்னைகைத்ததே இல்லை. அதனால்தான் தோற்றுப்போனார்கள்.

புன்னகை கடவுளின் மொழி. அதனால்தான் தெய்வங்களின் திருவுருவச் சிலைகளின் முகங்களில் சிற்பிகள் ‘மந்தஹாசம்’ என்கிற புன்னகையைச் செதுக்கினார்கள்.

தொட்டிலில் தூங்கும் குழந்தை புன்னகைப்பதைப் பார்த்திருக்கிறீர்களா? இன்னும் மனிதர்களைச் சந்திக்காத குழந்தை. அதன் கனவில் நிச்சயம் கடவுள்தான் விளையாட்டு காட்டியிருப்பார்.

சிறுவயதில் நான் படித்த பள்ளியில் ஓர் ஆசிரியர் இருந்தார். எப்போதும் புன்னகை செய்துகொண்டே இருப்பார். அவரிடம் எதற்காகச் சென்றாலும் முதலில் சின்னதாகப் புன்னகை செய்வார். அப்புறம் தான் பேசவே தொடங்குவார். அம்மைத் தழும்புகள் நிரம்பிய அவர் முகத்தைக் காட்டிலும் அழகான முகத்தை நான் பார்த்ததே இல்லை.

ஃபிளாரன்ஸ் நைட்டிங்கேலின் வாழ்க்கை வரலாற்றில் ஒரு ராணுவ வீரனின் நாட்குறிப்பு உருக்கமானது.

‘கரீமிய யுத்தத்தில், போர்முனையில் காயம்பட்டு போதுமான சிகிச்சை, முதலுதவி எதுமின்றி உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தோம். எங்களின் படுக்கை வரிசை மட்டும் நான்கு மைல் நீளம் இருக்கும். ஃபிளாரன்ஸ் நைட்டிங்கேல் பகல் முழுவதும் எங்களுக்கு முதலுதவியும் சிகிச்சையும் அளிப்பார். இரவு நேரங்களில் எங்களின் படுக்கை வரிசைகளின் ஊடாக, கையில் துருக்கிதேசத்து விளக்குடன் நடந்து போவார். எங்கள் ஒவ்வொருவர் முகத்தையும் பார்த்து முறுவலித்தபடி அவர் எங்களைக் கடந்து செல்கையில், சுவரில் தெரியும் அவர் நிழலை நானும், என் தோழர்களும் முத்தமிடுவோம். அவரது புன்முறுவல் ஒன்றே எங்கள் வலியையும் துயரத்தையும் மறக்கப் போதுமானதாக இருந்தது. புன்முறுவலையும் மருந்தாக்கிப் புண்களின்

தஞ்சாவூர்க் கவிராயர்

# புன்னகைப் பூ

மீது பூசி குணமாக்கினார்.'

இன்னொரு புன்னகை அற்புதம் உண்டு. தமிழ்நாட்டிலிருந்து சீனா சென்ற ஒரு புத்த துறவி, ஒரு மடாலயத்தின் பெருஞ்சுவருக்கு முன்னால் தியானத்தில் ஆழ்ந்திருக்கிறார்.

ஒன்றல்ல... இரண்டல்ல... ஒன்பது வருடங்கள்.

யாருக்கும் பதில் சொல்வதில்லை. முகத்தில் மாறாத புன்னகை.

சீனச்சக்கரவர்த்தி இவரைப் பற்றிக் கேள்விப்படுகிறார். துறவியை வந்து வணங்கி தனக்கு ஞானமார்க்கத்தை உபதேசிக்குமாறு கேட்டுக்கொள்கிறார்.

பதில் இல்லை. புன்னகை மட்டுமே.

மன்னரின் பொறுமை கோபமாக மாறுகிறது.

வாளை உருவுகிறார்.

''என் கேள்விக்கு பதில் சொல்லாவிட்டால் உன் கையை வெட்டிவிடுவேன்!''

துறவியின் முகத்தில் அப்போதும் புன்னகை. கண்ணிமைக்கும் நேரம். வாள் பாய்கிறது. துறவியின் ஒரு கை துண்டிக்கப்பட்டு விழுகிறது. ரத்த வெள்ளம்.

துறவியின் முகத்தில் அதே புன்னகை.

மன்னன் மனம் நடுங்குகிறது. இவர் நிச்சயம் ஆத்ம ஞானிதான்! கையை வெட்டியபிறகும் கலங்கவில்லையே! புன்னகை வேறு!

வெட்டிய கையை எடுத்துவந்து, தோளோடு சேர்த்துத் துடிக்கிறார்.

''என்னை மன்னிக்க வேண்டும்!''

என்ன ஆச்சரியம்! துண்டிக்கப்பட்ட கை தோளோடு ஒட்டிக்கொள்கிறது!

போதி தருமர் முகத்தில் அப்போதும் புன்னகை.

மன்னர் மருண்டு நிற்க-

போதி தருமரின் புன்னகையே முதல் உபதேசமாய் சீனச்சக்கரவத்தியைச் சேர்கிறது.

கடவுள், மகான், குழந்தை, காதலி இவர்களின் முகங்களில் பூக்கும் புன்னகைக்கு அர்த்தங்கள் வேண்டுமானால் வேறு வேறாக இருக்கலாம். ஆனால் விளைவு ஒன்றுதான்.

இவர்களின் புன்னகையால் வாழ்க்கை நந்தவனமாகிவிடுகிறது! ✿



**மேஷம்:** புதிய வீடு/மனை வாங்கும் யோகம் வந்துசேரும். கல்விவளம் மேலோங்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகளால் மனமகிழ்ச்சி ஏற்படும். பூர்வீகச் சொத்து வந்துசேரும். பணக்கஷ்டம் இருக்காது. வராத நிலுவைகள் வந்துசேரும். ராகு/கேது/சனி வழிபாடு செய்துவர நற்பலன் அதிகரிக்கும்.

**ரிஷபம்:** தெய்வ அனுகூலம் சித்திக்கும். புண்ணியஸ்தலம் செல்வீர்கள். உடல்நிலை சீராகும். கடன் சுமை அதிகரிக்கும். திருமணத் தடை விலகும். வீடு மாற்றம், உத்தியோகத்தில் இடப்பெயர்ச்சி ஏற்படும். குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

# 14.9.08 முதல் 20.9.08 வரை

# நடக்குமென்பார்; நடக்கும்!






**மிதுனம்:** சுபநிகழ்ச்சி கைகூடி வரும். யாரிடமும் வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். வாகனங்களில் செல்லும்போது கவனம் தேவை. உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். உடல்நிலையில் கவனம் தேவை. ராகு/கேது வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கடகம்:** குடும்ப வாழ்வில் ரொம்பவும் அனுசரணையுடன் போவது நற்பலனை அளிக்கும். வேலைப்பளு அதிகரிக்கும். வழக்கு தாமதம் ஆகும். பணத் தேவைகள் அதிகரிக்கும். வியாபாரத்தில் மந்தமான சூழ்நிலை காணப்படும். குரு/சனி வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீரும்.

**சிம்மம்:** கடன் தொல்லை தீரும். திருமணப் பேச்சுவார்த்தை பலிதமாகும். வாகன சுகம் கிட்டும். வெளிநாடு செல்லும் யோகம் வந்துசேரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் காணப்படும். வீடு/மனை வாங்க உகந்த காலம். சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கன்னி:** வீடு மாற்றம், தொழில் மாற்றம் உண்டாகும். வைத்திய செலவு அதிகரிக்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். அனாவசியமான செலவுகள் வந்துசேரும். தொழில் துறையில் சற்று, மந்தமான சூழ்நிலை ஏற்படும். சனி/குரு/ராகு/கேது வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**துலாம்:** வியாபாரத்தில் அபரிமிதமான லாபம் கிட்டும். புதிய தொழில் முயற்சி பலிதமாகும். உத்தியோகத்தில் இட மாற்றம் ஏற்படும். செலவுகள் சுபமானதாக இருக்கும். நீண்டகால பிரச்னை முடிவுக்கு வரும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி கிட்டும். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** மன மகிழ்ச்சி அதிகரிக்கும். தெய்வ அனுகூலம் ஏற்படும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். செலவுகள் நல்ல வழியில் ஏற்படும். குடும்பத்தில் சுபகாரியம் கைகூடும். சனி வழிபாடு

செய்துவர நற்பலன் உண்டாகும்.

**தனுசு:** எதிலும் நிதானத்துடன் நடந்து கொள்வது நல்லது. இல்லற வாழ்வில் விட்டுக்கொடுத்துப் போவது நன்மை அளிக்கும். படிப்பில் அதிக கவனம் செலுத்தவும். கொடுக்கல், வாங்கலில் உஷார். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** குடும்பவாழ்வில் விட்டுக் கொடுத்து அனுசரணையுடன் நடந்து கொள்வது நற்பலனைத் தரும். வேலைப் பளு அதிகரிக்கும். வியாபாரத்தில் சற்று மந்தமான சூழ்நிலை காணப்படும். உடல் நிலையில் கவனம் செலுத்தவும். ராகு/கேது/ சனி/ குரு வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**கும்பம்:** எதிர்ப்புகள் விலகி, தொழில் முன்னேற்றம் உண்டாகும். வேலையில் நற்பெயர் உண்டாகும். வியாபாரத்தில் நல்ல ஆதாயம் கிட்டும். மகப்பேறு பாக்கியம் உண்டாகும். வீடு/மனை வாங்க உகந்த நேரம். எதிர்பாராத செலவினங்கள் உண்டாகும். சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மீனம்:** கூட்டாளிகளை விட்டு விலக நேரிடும். வேலையில் இடமாற்றம் ஏற்படும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். திருமண முயற்சி பலிதமாகும். கடன் தொல்லை தீரும். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வரும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும். ○









**தஞ்சை பரத்வாஜ்**

## ஸ்மைல் ப்ளீஸ்




"இத்தனை வயசுக்குப்பிறகு உங்க ஜாதகத்தையும் சம்சாரம் ஜாதகத்தையும் தூக்கிட்டு அலையறீங்களே... ஏன்?"

"என்னிக்காவது நானும் சம்சாரமும் பிரியற யோகம் இருக்கானு தெரியணும்!"

- அம்பை தேவா

''வெற்றிப் படத்துக்குரிய அத்தனை அம்சங்களும் இந்தப் படத்தில் இருக்கின்றன. படத்தின் தயாரிப்பாளர் என்பதைவிட, ஒரு சினிமா ரசிகன் என்கிற முறையில் சொல்கிறேன். படம் சூப்பர் ஹிட்டாகும்'' என்று 'பொய் சொல்லப் போறோம்' படத்தின் முதல் பிரதியைப் பார்த்த ப்ரியதர்ஷன் பாராட்ட, ஏகத்துக்கும் குஷியில் மிதக்கிறார் இயக்குனர் விஜய்.

''வசிஷ்டர் வாயால பிரம்ம ரிஷி பட்டம் வாங்குனது மாதிரி இருக்கு, இயக்குனர் ப்ரியதர்ஷனோட பாராட்டு. அவரிடம் உதவி இயக்குனராக வேலை செஞ்ச நாட்களை மறக்கவே முடியாது. எத்தனை படங்களை இயக்கினாலும் நான் எப்பவுமே அவரோட அசிஸ்டென்ட்தான். ஒருநாள் ப்ரியதர்ஷன் ஸார்கிட்டேருந்து ஃபோன். 'என் கம்பெனியில ஒரு படம் பண்ணுறீயா?'ன்னு கேட்டார். எனக்குத் தலைகால் புரியல. உடனே அவரோட ஆஃபீஸுக்கு ஓடிட்டேன். அங்க போனப்ப, நான் பண்ணப்போற படத்துக்கான ஒப்பந்தங்கள் கையெழுத்தாகி இருந்தன. மலையாளத்துல பெரிய மியூஸிக் டைரக்டர் எம்.ஜி.ஸ்ரீதர், 'யூ' டீ.வி.ன்னு... எல்லாமே பெரிய பெரிய ஆளுங்க. எனக்கு உதற ஆரம்பிச்சுடுச்சு. ப்ரியதர்ஷன் ஸார் நம்மள நம்பி இவ்வளவு பெரிய பொறுப்பைக் கொடுத்திருக்காரேன்னு பயந்துட்டேன். ஆனாலும் நான் எங்க வித்தை கத்துக்கிட்டேனோ, அங்கயே என்னை நிரூபிக்க நல்ல வாய்ப்புன்னு ஒத்துக்கிட்டேன்'' என்று குரு புராணம் பாடியவரை, 'கொஞ்சம் 'பொய்' புராணம் பாடுங்க' என்றோம்.

''நேராகப் போற நதியைவிட வளைஞ்சு போற நதியிலதான் வசீகரம் அதிகமா இருக்கும். அதுபோலத்தான் வாழ்க்கையும். ஓர் உண்மை உணர்த்தற செய்தியைவிட, சிறு பொய் நிகழ்த்தற கலவரம் சுவாரஸ்யமானது. அப்படிப்பட்ட சுவாரஸ்யமான பொய்களை அடுக்கிவைத்து எழுப்பப்பட்ட கதைதான் 'பொய் சொல்லப் போறோம்.' படத்தோட ஹீரோவே பொய்தான். படம் முழுக்க பொய், பொய்யைத் தவிர வேறொன்றுமில்லை.

ஒரு குறிப்பிட்ட பகுதியை தன்னோட செல்வாக்கால கட்டி ஆள்றார் ஒரு பெரும் புள்ளி. அவரால பாதிக்கப்பட்ட பதினான்கு பேர், அவருக்கெதிரா சின்னச்சின்ன பொய்களை செட் பண்ணி ஆட்டம் காண வைக்கிறதையும் அவங்களுக்கெதிரா பெரும் புள்ளி அடங்கறதையும் திரைக்கதையில திருப்தியா கொண்டு வந்திருக்கோம். இந்தப் படத்துல நாசர், மௌலி - இந்த இரண்டு சினிமா காதலர்களோடு ஒர்க் பண்ணினது எனக்கு இனிப்பான அனுபவம். நாசர் ஸார், காலையில



ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வந்தார்னா எப்ப பிரேக், பேக்அப்... எதுவுமே கேட்க மாட்டார். அதனால்தான் படத்துல நாற்பத்தைஞ்சு நிமிஷம் வர்ற அவரோட போர்ஷனை அஞ்சே நாட்கள்ல எடுத்து முடிச்சோம்'' என்றவரிடம் படத்தின் இசையைப் பற்றிக் கேட்டோம். ''எம்.ஜி.ஸ்ரீதர் மலையாளத்துல மிகப் பெரிய மியூஸிக் டைரக்டர். அவரோட இசையில் பாடல்கள் பிரமாதமா வந்திருக்கு. ஏன் உங்க ஃபிரண்ட் ஜி.வி. பிர

காஷ் மியூஸிக் பண்ணலைன்னு நிறைய பேர் கேட்டாங்க. என் படத்துல அவர் மியூ ஸிக் பண்ணினாதான், அவர் எனக்கு நண் பர்னு கிடையாது. எங்களோட நட்பு சினி மாவைத் தாண்டி ஆத்மார்த்தமானது. என் னோட முதல் படம் 'கிரிடம்' மியூஸிக்கலா மிகப் பெரிய வெற்றி அடைய அவர்தான் காரணம். சின்ன வயசிலேயே அவருக்கு அபாரமான மெச்சூரிட்டி. நான் இந்தி படங்கள்ல ஒர்க் பண்ணினதால சொல் றேன். அங்க பண்ற பரிசோதனை முயற்சி களை தமிழ்லயும் பண்ணணும். இந்திய சினிமான்னா அது இந்திதான்ங்கற ஒரு மாயை இருக்கு. அதை உடைக்கணும்னா கதைகளில் தமிழ் இயக்குனர்கள் வித்தியா சம் பண்ணணும். இதை எனக்கு ஃப்ரண்டா இருக்கற எல்லா இயக்குனர்கள்கிட்டயும் அப்பப்ப பகிர்ந்துக்குவேன். கண்டிப்பா இனி வரும் காலங்கள் தமிழ் சினிமாவுக் குப் பிரகாசமான காலம்'' என்றவர் தனது அடுத்த ப்ராஜெக்ட் பற்றியும் பேசினார்.

''என்னோட கல்லூரி நாட்களில் எனக்கு நிகழ்ந்த சம்பவங்கள்தான் எனது அடுத்த படத்துக்கான கதை. கல்லூரி என்பது ஒரு வாணவில் பிரதேசம். உயிருக்குயிரான நண் பர்களாப் பழகினவங்க, கல்லூரி காலத்துக் குப் பிறகு என்ன பண்றாங்க, எங்க இருக் காங்கன்னு தெரியாது. ஒரே ரோட்டுல ஒருத் தரை ஒருத்தர் யாருன்னு தெரியாம க்ராஸ் பண்ணிப் போவோம். இன்னைக்கு என்னோட கல்லூரி நண் பர்கள் எங்க இருக்காங் கன்னே தெரியாது. அந்த நினைவுகளைத் தேடி சேர்க் கும் முயற்சிதான் என் அடுத்த படம். விரைவில் அறிவிப்பு வரும்'' என்கிறார். ''அப்ப அந் தப் படத்துல நீங்கதான் ஹீரோவா?'' என்றால் ''எனக்கு என் உயரம் தெரியும் பாஸ்'' என் கிறார். ஹீரோவாக என்ன உயரம்?

# ''பொய்தான் ஹீரோ''

– கதிர்பாரதி

## - இயக்குநர் விஜய் பேட்டி

# கத்தாதே இது எமலோகம்



"ஆஹா! நான் பிழைத்துவிட்டேன்! ஆபரேஷன் சக்ஸஸ்!"
"கத்தாதே. இது எம லோகம்!"
- அ.ப.ஜெயபால்



"டாக்டர்! என் கணவருக்கு ஞாபக மறதி அதிகமா போச்சு."
"எப்படி சொல்றீங்க?"
"ஆமாம், இப்பகூட பாருங்க. நல்ல டாக்டர்கிட்டே போறேன்னு சொல்லிட்டு உங்ககிட்டே வந்துட்டாரு."
- வி.சாரதிடேச்சு



"கட்டின புடைவையோட வா, நான் 'கஞ்சி' ஊத்தறேன்!"
"எனக்கா, இந்தக் 'காட்டன்' புடைவைக்கா?"
- வெ.சீதாராமன்



"ஏன் பாட்டி, கண் தெரியலைனா ஆபரேசன் செஞ்சுக்க வேண்டியதுதானே?"
"ஆபரேசன் செஞ்சதால தான் கண் தெரியலை!"
- கோ. சண்முகசுந்தரம்

# கல்கி

## தீபாவளி மலர் 2008

படம் : தேவமணி ராஃபேல்

- மங்கையர் மலர் பக்கங்கள்
- சிறுவர்களுக்கான கோகுலம் பகுதி
- சிரிக்கச் சிரிக்க சித்திரத் துணுக்குகள்
- ரசித்து மகிழ வண்ணப்பட அணிவகுப்பு
- அமரர் கல்கியின் நெடுங்கதை; டி.கே.சி.யின் கடிதம்
- ராஜாஜி சிந்தனைகள்; காஞ்சி முனிவர் அருள்வாக்கு



விலை மதிப்பற்ற இந்தத் தயாரிப்பின் விலை ரூ.100/- மட்டுமே!

கூரியரில் பெற ரூ.30 சேர்த்து, டி.டி. அல்லது மணியார்டர் அனுப்புங்கள்

இப்போதே உள்ளூர் ஏஜெண்டிடமும் பதிவு செய்துகொள்ளலாம்.

தொடர்புக்கு : மேனேஜர், கல்கி,

47, ஜவாஹர்லால் நேரு சாலை, சென்னை - 600 032.

தொலைபேசி : 4343 8888.

# போட்டிக் கதை-5



# மு.செல்லா

சரவணனுக்கு, சமீபகாலமாய் காய்கறி விற்க வரும் அந்தக் கறுப்புப் பெண், அம்மாவோடு அன்னியோன்யமாகப் பேசுவதை ஒட்டுக் கேட்பதும், அவளுக்குத் தெரியாமல் அவளை உற்று நோக்குவதும் வாடிக்கையானது.

முப்பது வயதுக்குள் தான் இருக்க வேண்டும். உழைப்பின் மெருகு அவளது வறுமையை மறைத்து பார்ப்பவரை ஈர்ப்பதாயிருந்தது.

''அம்மா! ராஜி வந்திருக்கேன். முந்தா நாளே கத்திரிக்கா கேட்டியே! கத்திரிக்கா பிஞ்சா இருக்கு... வாம் மோவ்...'' வாசல் படியேறி நின்று உரக்கக் குரல் கொடுத்தவளை ஜன்னலோரத்தில் அமர்ந்து தேர்வுக்குப் படித்துக்கொண்டிருந்த சரவணன் மீண்டும் உற்றுப்பார்த்தான்.

''இதோ வர்றேன்!'' குரல் கொடுத்தவாறு வாசலுக்கு வந்துகொண்டிருந்தாள் சரவணனின் தாய் மகாலட்சுமி.

வாசலில் வந்து நின்ற மகாலட்சுமியை ஏற இறங்க பார்த்த காய்கறிக்காரி, ''அம்மா! உங்களுக்கு மகாலட்சுமிங்கற பேரைப் பொருத்தமாத்தாம்மா வச்சிருக்காங்க! என் கண்ணே பட்டிடும் போலிருக்கே! ம்... நானும் இருக்கேனே அழுது வடிஞ்சுக்கிட்டு!'' என்றாள்.

''ச்சீ! போடி!'' என்று பொய்க் கோபம் காட்டிவிட்டு, ''ராஜேஸ்வரி, கத்தரிக்காயும் கூடவே ஒருகட்டு புதினா, ஒருகட்டு மல்லி எடுத்து வை'' என்றாள் மகாலட்சுமி.

காய்கறியை மகாலட்சுமி மடியில் கொட்டிவிட்டு, காசை எண்ணி வாங்கிக்கொண்டே, ''ஏம்மா! என்னைய தப்பா நினைக்கலேன்னா ஒண்ணு கேக்கறேன்! நானும் ஒரு மாசமா உங்க வீட்டுக்கு

# அம்மாவின் தாலி



வந்துக்கிட்டு இருக்கேன். உங்க வீட்டு அய்யாவைப் பார்க்கவேயில்லையே. எங்க இருக்காரு, என்னா செய்யிறாரும்மா?'' அப்பாவியாய்க் கேட்டாள்.

அதுவரை கலகலப்பாய் இருந்த மகாலட்சுமியின் முகம் சற்று இறுக்கமாகியது. அவள் சற்று மௌனம் காட்டினாள்.

ஜன்னலோரத்தில் அமர்ந்து அவர்களின் உரையாடலைக் கேட்டுக்கொண்டிருந்த சரவணனுக்கு மனம் கிடந்து அடித்துக் கொண்டது. 'எங்கப்பாவுக்கு எங்கம்மா இரண்டாந்தாரம். எங்கப்பாவுக்கு நாடாறு மாதம், காடாறு மாதம். எங்கப்பா இப்ப காடாறு மாதத்தில் இருக்கார்'' என்று கத்தவேண்டும் போல் தோன்றியது.

தன்னைச் சுதாரித்துக்கொண்டு, முகத்தில் புன்னகையைப் படரவிட்டவளாக, ''என் வீட்டுக்காரர் சென்னையிலே தொழில் செய்றார். ஒரு மாசம், ஒன்றரை மாசத்துக்கு ஒருதரந்தான் வருவார்'' என்றாள் மகாலட்சுமி.

''அப்படியாம்மா! உம் புருஷன் நல்லவராத்தான் இருக்கணும். எம் புருசன் மாதிரியா?'' அப்பாவியாக தன் ஆதங்கத்தை வெளிப்படுத்தினாள் ராஜேஸ்வரி.

சற்று பேச்சை மாற்றினால் தேவலை என்று எண்ணிய மகாலட்சுமி, ''ஏண்டி, உன் வீட்டுக்காரனுக்கு என்ன ஆச்சு?'' என்றாள்.

''அந்தாளு நல்லாத்தான் இருக்கான். கடன ஒடன வாங்கி பால் வியாபாரம் வைச்சுக் கொடுத்தேன். குடிச்சே அத்தனையும் அழிச்சுப் போட்டுடுச்சு; இப்ப கூலி வேலைக்குப் போகுது. வாங்குற கூலியையும் குடிச்சிட்டு வந்து, என்ன தினம் அடிக்கிறதே அந்தாளுக்கு வழக்கமாப் போச்சு! செத்து செத்துப் பிழைக்கிறேன்''

**"...என்னைய அந்தாளு நாலடி அடிச்சா ரெண்டடி திரும்பக் கொடுக்க வேண்டியதுதான்"**

''அவனத் திருத்துறதுக்கு நீயேதும் முயற்சி எடுக்கலையா?''

''நான் சொல்லாத புத்தியில்ல, போகாத கோயிலில்ல. சொல்லிப் பார்த்தேன். திட்டிப் பார்த்தேன். ஏன் கோவம் வந்தா, இந்தக் கையால நாலு சாத்து சாத்திப் பாத்தேன்... மனுசன் திருந்தக் காணோமே தாயி!''

''ஏண்டி! என்னடி கேவலம் இது? நீ உம் புருசன அடிப்பியா?'' அதிர்ச்சியாய்க் கேட்டாள் மகாலட்சுமி.

ஜன்னலோரத்தில் அமர்ந்து இருவரையும் பார்த்துக்கொண்டும் அவர்கள் உரையாடலைக் கேட்டுக்கொண்டுமிருந்த சரவணனுக்கும் பலமான அதிர்ச்சி.

''ஆமாம்மா! பெத்த புள்ள தப்பு செஞ்சா அடிக்கிறது இல்ல, அது போலத்தான் கட்டுன புருசன் அடாவடி பண்ணினாலும், என்னைய அந்தாளு நாலடி அடிச்சா ரெண்டடி திரும்பக் கொடுக்க வேண்டியதுதான்.

ஆனா ஒண்ணு, எம்மேலயும் ஆசை வச்சா ரொம்பப் பிரியமா ஆயிடும். அதான் அடிச்சிக்கிட்டும் புடிச்சிக்கிட்டும் அந்த மனுசன்கூட வாழ வேண்டியிருக்கு'' சிறிய வெட்கத்தோடு சொல்லிமுடித்தாள் ராஜேஸ்வரி.

''என்னடி ஜென்மம் நீ! குடிச்சுப்புட்டு வந்து அடிக்கிற புருசனுக்கு அடியும் கொடுக்கறேன், சந்தோஷமும் கொடுக்கிறேன்னு சொல்ற'' என்றவாறு ராஜேஸ்வரியின் வார்த்தைகளை ஜீரணிக்க முடியாதவளாய் ஏறிட்டாள் மகாலட்சுமி.

கூடையைத் தலையில் வைத்த ராஜேஸ்வரி, ''ஆனா ஒண்ணும்மா. எம் புருசன் குடிச்சாலும், என்னைய அடிச்சாலும், காசத் தொலைச்சாலும் வேற எந்தச் சிறுக்கியையும் ஏறெடுத்துப் பாக்காது ஆமா. அதான் நான் கிடந்து அந்தாளுக்காக அடிச்சிக்கிறேன்'' என்று அனாயாசமாக ஒரு அஸ்திரத்தை வீசிவிட்டு வீதியில் நடந்தாள்.

ராஜேஸ்வரி கடைசியாய் உதிர்த்துவிட்டுச் சென்ற வார்த்தைகள் மகாலட்சுமியின் மனதுக்குள் புயலாய்த் தாக்கியது.

முதல் மனைவிக்குத் துரோகம் செய்துவிட்டு, எந்தத் தடையமும் இல்லாமல் தன்னை இரண்டாந்தாரமாக கட்டிக்கொண்ட கணவனின் செயல் துரோகத்தனமாய் சட்டென தெரிய ஆரம்பித்தது.

வாழ்க்கை யதார்த்தத்தை இதுவரை அறிந்திராத பதினாறு வயது சரவணனின் மனத்தில், சுவர் வெடிப்பில் முளைத்த செடியாய் காய்கறிக்காரியின் வார்த்தை முளைத்துவிட்டது 'அப்பாவின் செயல் துரோகம்' என்று.

மாதத்தில் என்றோ ஒருநாள் திருடன் போல் வந்து தங்கிவிட்டுப் போகும் அந்த மகாயோக்கியருக்காக மாஞ்சு, மாஞ்சு பூஜை செய்து ஆயுள் வரம் கேட்கும் அம்மா! இதற்கு நேர்மாறாய் வாழ்ந்து கொண்டிருக்கும் காய்கறிக்காரி குடும்பம்.

## வில்லியாக மும்தாஜ்

''என்னோட படங்கள்னாலே கலகலப்பையும் கமர்ஷியல் விஷயங்களையும் எல்லாரும் எதிர்பார்ப்பது இயல்பு. அதே நேரத்துல கதையும் மிஸ் ஆகாது. அப்படி வளர்ந்து வர்ற படம் ராஜாதிராஜா. ஒருத்தனோட வியர்வை மத்தவங்களோட உயர்வுக்குக் காரணமா இருந்துச்சுன்னா, அந்த வேர்வை கோயில் தீர்த்தத்தைவிட புனிதமானது. அப்படிப்பட்ட ஒருவனைப் பற்றிய கதைதான் இந்தப் படம்'' என்கிறார் இயக்குனர் கம் தயாரிப்பாளர் ஷக்தி சிதம்பரம். தனது சினிமா பேரடைஸ் நிறுவனத்தின் மூலம் அவர் தயாரிக்கும் நான்காவது படம் இது.

''இந்தக் கதைக்கு லாரன்ஸ் ஏன் ஹீரோ?'' என்று கேட்டால்,

எது தப்பு? எது சரி? பட்டிமன்றமே நடந்தது சரவணனின் மனதுக்குள்.

மூன்றாவது நாள், ''அம்மா காய்கறி வாங்கலையா?'' என்ற குரல் கேட்டு, அம்மாவும், பிள்ளையும் ஒருசேர வந்து வெளியே எட்டிப் பார்த்தார்கள்.

யதார்த்தமாக ராஜேஸ்வரியை ஏறிட்டுப் பார்த்த மகாலட்சுமி, ''ஏன்டி! என்ன அலங்கோலம் இது? வெறுங்கழுத்தோட வந்திருக்க, கழுத்தில் போட்டிருந்த தாலி எங்கே? உம் புருசனுக்கு ஏதாவது...'' வார்த்தையை முடிக்கும் முன்னரே,

''அட... நீங்க வேறம்மா! அது கல்லாட்டமா இருக்கு. நேத்து ராத்திரி குடிச்சுப்புட்டு வந்து சைக்கிள் வாங்க காசு கொடுன்னு கேட்டுச்சு. அம்புட்டுக் காசுக்கு எங்க போறது, எனக்கும் அடி, விலக்க வந்த ஆத்தாளுக்கும் அடி.

காசக் குடுடி இல்லாட்டி நான் கட்டின தாலியக் குடுடீன்னு ஒரே வம்பு, முரண்டு. சமாளிச்சுப் பார்த்தேன் முடியலை. இதப் பாரய்யா! நீ கட்டின தாலிதான வேணும்

''லாரன்ஸ், நிஜ வாழ்க்கையில் ரொம்ப கண்ணியமானவர், தன்னால் ஆன உதவிகளைச் சத்தமில்லாமல் மற்றவர்களுக்குச் செய்துவருபவர். என்னோட படத்தின் கதையும் அதுதான் என்பதால் அவரைத்தவிர வேறு யார் இந்தப் படத்தில் நடித்தாலும் பொருத்தமாக இருக்காது. தவிர, அவருக்கு இந்தப் படத்தில் ஆறு கதாநாயகிகள். ஆறு பேருக்குமே இந்தப் படத்தில் முக்கியத்துவம் இருக்கிறது. குறிப்பாக மும்தாஜ் - லாரன்ஸ் சந்திக்கும் காட்சிகள், அப்படியே மன்னன் - விஜயசாந்தியை ஞாபகப்படுத்தும். முதன்முறையாக, மும்தாஜ் இதில் வில்லியாக நடித்திருக்கிறார். இத்தனை நாள் தமிழ்ச் சினிமா அவரை குத்தாட்டம் போடும் கதாநாயகியாகத்தான் பயன்படுத்தி வந்திருக்கிறது. இந்தப் படத்தின் மூலம் அவருடைய நடிப்பின் இன்னொரு பரிமாணம் தெரிய வரும்'' என்கிறார்.



- கண்மணி

புடிச்சக்கோன்னு கழட்டி அந்தாள் மூஞ்சியிலே விட்டெறிஞ்சுட்டேன். தாலியைக் கையில புடிச்சக்கிட்டே தூங்கிப்போயிட்டான் மனுசன்.''

''இது என்னடி கர்மாந்திரம்? யாராவது வாழுற பொம்பள புருசன் இருக்கும்போதே தாலியக் கழற்றி விட்டெறிவாங்களா? கேட்கும்போதே தலை சுத்துதே!'' என்றவாறு கையால் தன் வீட்டு மதிலை இறுகப் பற்றிக்கொண்டு பொரிந்து தள்ளினாள் மகாலட்சுமி.

''யம்மோ! ஏம்மா நீ கிடந்து அடிச்சிக்கற? தாலி பொம்பளைக்கு வேலியாயென்ன... கழற்ற முடியாத நாய்ச் சங்கிலிதானேன்னு எம் புருசனுக்கு நினைப்பு. அந்த நினைப்ப மாத்தணுமிலே... அதான் புடிச்சக்கோன்னு கழற்றி அவன் மூஞ்சியில விட்டெறிஞ்சிட்டேன். இன்னும் கொஞ்ச நேரத்தில பாரேன் தாலியத் தூக்கி பையில போட்டுக்கிட்டு எம் பின்னாடி தாஜா பண்ண வந்திடுவான் மனுசன்'' என்று சாவகாசமாகக் கூறிவிட்டு, ''சரிம்மா... என்ன காய் வேணும் இன்னைக்கு... அதைச் சொல்லு?'' என்றவாறு கால் கிலோ முட்டைக்கோஸ், கால் கிலோ வெண்டைக்காய் நிறுத்துக் கொடுத்தாள்.

மகாலட்சுமிக்கு பேச்சே வரவில்லை. தன் வீட்டு நிலையோடு நிலையாக அவளையே பார்த்தபடி நின்றுவிட்டாள்.

''அட என்னம்மா! தாலி கையில இருக்கா? கழுத்தில இருக்காங்கறதா பிரச்னை? புருசன் திருந்துவானா? மாட்டானா? அப்படீங்கறதுதான் பிரச்னை. ரெண்டு நாளைக்கு நா பேசாம மூஞ்சியத் தூக்கி வெச்சிக்கிட்டா அந்தாளுக்குப் புத்தி வந்து இன்னொருதரம் தாலிய எங்கழுத்திலே கட்டட்டுமே!'' என்றவள், ''சில்லறையை எடுத்து வைம்மா. நாலு வீடு போயிட்டு அப்புறமா வந்து உங்கிட்டே வாங்கிக்கறேன்'' என்றவாறு தலையில் கூடையுடன் எழுந்து நின்றாள்.

எட்ட நின்று ராஜேஸ்வரியின் வெறுங் கழுத்தையும், அம்மாவின் மஞ்சள் பூசப் பட்ட தாலியையும் மாறி மாறிப் பார்த்த சரவணனுக்கு, முதல் முறையாக அம்மாவின் தாலி அர்த்தமின்றிப்பட்டது. ●

# ஜெயம்கொண்டான்



ஹீரோவும் வில்லனும் க்ளைமாக்ஸ்வரை மோதிக்கொள்ளாத ஆக்ஷன் கதையில், அண்ணன் - தங்கை இருவரும் காட்சிக்குக் காட்சி சண்டைக்கோழியாகக் கலவரப்படுத்துவதுதான் 'ஜெயம்கொண்டான்' ஸ்பெஷாலிட்டி.

உறவுகளைப் பாசத்தாலும், எதிரிகளைப் பலத்தாலும் எதிர்கொள்ளத் தெரிந்தவனுக்கு, திசையெங்கும் ஜெயம்தான் என்பதுதான் படத்தின் லாஜிக். அறிமுக இயக்குநர் ஆர். கண்ணன், குட்டிக்குட்டி சுவாரஸ்யங்களால் கதையை நகர்த்தி வெற்றிபெறுகிறார்.

அடாவடித் தங்கையை அன்பினால் தாக்கும் ஆர்ப்பாட்டமில்லாத அண்ணனாக வினய். மனிதர் கதையின் கனத்தைத் தாங்கமுடியாமல் திணறுவது பெருத்த சோகம். அதுவும் எல்லா உணர்வுகளுக்கும் ஒரே ஃபேஸ் எக்ஸ்பிரஷன். இப்படி இருந்தா எப்படி ஸார் நிலைச்சு நிக்கறது? வினய்யை வெறுக்கும் ஈகோயிஸ்ட் தங்கையாக லேகா, செம ஸ்கோர். அவரது மின்வெட்டுப் பார்வையும், அலட்சியப் பேச்சும், தனிமையில் ஏக்கமும்... பாத்திரத்துக்குப் பாந்தம்.

படம் முழுக்க பளபள பாவனா க்யூட் ப்யூட்டி. வினய்தான் வீட்டு ஓனர் என்று தெரியாமல், பெண் பார்க்க வந்திருக்கிறார் என நினைத்துக்கொண்டு அவரிடம் வாயடிக்கும் காட்சிகளில் ஸ்வீட் மிர்ச்சி.

மதுரை வில்லன் கிஷோர் மனசுக்குள் கலவரமூட்டும் லாஞ்சர் ராக்கெட். ஆனால் சென்னையில் வினய்யைத் தேடிக்கொண்டு அலைகையில் புஸ்வாணமாகிறது அவரது கேரக்டர். வில்லனோடு வில்லியாக வளைய வரும் அதிசயா, அநியாயத்துக்கு அபாரம். சின்னச்சின்ன மேனரிஸங்களில் மனசுக்குள் மத்தளம் அடிக்கிறார்.

வார்த்தைகளில் கரகம் விளையாடும் விவேக். எத்தனை நாளுக்கு அரைச்ச மாவையே அரைப்பீங்க. ஏதாவது புதுசா பண்ணுங்க அப்பு. 'நான் வரைந்த சூரியன்', 'ஒரே நாளில்' இரண்டு பாடல்களில் தான் மெலடி கிங் என்பதை மீண்டும் நினைவுறுத்துகிறார் வித்யாசாகர். பின்னணி இசையில் ஏனோ சுவாரஸ்யம் மிஸ்ஸிங். பாலசுப்ரமணியெம் கேமராவில், மதுரை மல்லி வாசனையோடும், சென்னை பீக்அவர் டென்ஷனோடும் பதிவாகியிருக்கிறது. பட்டுக்கோட்டை பிரபாகரின் இயல்பான வசனங்கள் படத்துக்குப் பக்கபலம்.

முன்பாதியில் 'ஜில்'லென்று நகரும் திரைக்கதை ஆர்வமேற்படுத்த, பின்பாதியோ 'டல்'லடிக்கிறது. அதுவும் மதுரையில் தொடங்கி சென்னையில் முடியும் திரைக்கதை புதுசா?! யூகிக்கமுடியாத க்ளைமாக்ஸில் இதயம் நுழைகிறார் இயக்குநர்.

– மகிமைராஜன்

# ஸ்மைலிங் காலனி

''என் காதலிக்காக நான் சிகரெட் பிடிப்பதை விட்டுட்டேன். தண்ணி யடிப்பதை விட்டுட்டேன்.''

''ஆனால் இப்படிப் பொய் சொல்றதை மட்டும் விடவே இல்லன்னு சொல்லு!''

**- அரவக்குறிச்சிப்பட்டி எம். அசோக்ராஜா**



''நான் பகுத்தறிவுவாதி சார்.''

''சரிய்யா! இப்போ அதுக்கு என்ன?''

''சுடுறதுக்கு முன்னாடி குறி பார்க்கச் சொல்றீங்க? எனக்கு ஜோஸ்யம் பார்க்கறது, குறி பார்க்கறதுல எல்லாம் நம்பிக்கை கிடையாது... தெரிஞ்சுக்கோங்க.''

**- அரிசி ஸ்ரீராம்**



''எங்க! சொர்க்கத்தில் கணவனும் மனைவியும் தனித்தனியா இருப்பாங்களாமே?''

''அதனாலதான் அதுக்கு பேரு சொர்க்கம். புரியுதா?''

**- அதிரை புகாரி**






**- தஞ்சை தாமு**

முதல் நாள், 'ஜிம்'மிலிருந்து வரும் ஹரியின் வரவுக்காகக் காத்திருந்தாள் அருணா. வந்தவுடன் ''எப்படிங்க இருந்துச்சு. ஈஸியா இருக்கா? பண்ண முடியுதா? அதுக்குள்ள தொப்பை ஒரு சுத்து கம்மியான மாதிரி இருக்கே?'' என்று கேள்விக் கணைகளைத் தொடுத்தாள். 'ஷ்ஷ்ஷ்' என்று பெருமூச்சுடன் சோபாவில் சரிந்தவன், ''தண்ணி கொண்டா'' என்றான்.

''கொஞ்சம் கஷ்டமாத்தான் இருக்கு. உனக்கும் பணத்தைக் கட்டிட்டேன். சாயங்காலம் 4-5 பேட்ச் கொடுத்துருக்காங்க. போயிடு'' என்று ஆஃபீஸுக்குக் கிளம்பினான்.

மாலையில் 'ஜிம்'மில் உணர்ச்சிக் குவியல்களாய் இருந்தாள் அருணா. வெஸ்டர்ன் இசை ஒலித்துக்கொண்டிருந்தது. அந்தப் பெரிய ரூமில் ட்ராக் ஸூட்டும் ஷூவுமாய், வயது வித்தியாசமின்றி பெண்கள் வேர்க்க விறுவிறுக்க உழைத்துக்கொண்டிருந்தனர்.

அது என்ன மெஷின்... ம்ம்... தொப்பையைக் குறைக்கும் என்று டி.வி.யில் பலமுறை பார்த்திருப்பது நினைவுக்கு வந்தது.

இன்றே அதில் பயிற்சி செய்து ஒரு இன்ச் குறைந்துவிடும் ஆர்வத்தில் அதன் அருகே சென்று நின்றுகொண்டாள். கோச் வந்து, ''மேடம், இங்க வாங்க, அதெல்லாம் அப்புறம்தான்...'' என்றவுடன் ஏமாற்றமாய் இருந்தது. வெளிக்காட்டிக் கொள்ளாமல் கோச்சருகில் வந்தாள். ''முதலில் வாம் அப். நான் சொல்லித் தர்றதை அப்படியே செய்யுங்க'' என்று சில பயிற்சிகளைச் சொல்லிக்கொடுத்தாள்.

''காலைல வாக் போறேன் மேடம்.''

''பரவாயில்ல... இப்பவும் நடங்க'' என்றாள் கோச். பத்து நிமிடம்கூட நடக்கமுடியவில்லை. வேர்த்துக் கொட்டியது. மூச்சு முட்டியது.

''காலைல... ஃபிரெண்ட்ஸ்ங்களோடு சேர்ந்து பேசிட்டேவா நடப்பீங்க? ''

''அது எப்படி மேடம்... பேசாம முடியும்?'' என்றாள் அருணா.

''அப்படி நடந்து ஒரு பிரயோஜனமும் இல்ல. பேசினா ஆக்ஸிஜன் அதிகமா வெளில போயிடும். பிரயோஜனம் ஒண்ணுமில்லே. அதனால தனியாத்தான் நடக்கணும். அப்பதான் எஃபெக்ட்

# தனிநபர் யுத்தம்

கிடைக்கும்'' என்றாள் கோச். அப்படின்னா இத்தனை நாட்களாக நடந்ததுக்கு பலனில்லையா? ஹரி சொன்னது சரிதான். 'ச்சே' என்று தன்னைத்தானே நொந்து கொண்டாள்.

அந்த வாரத்தில் தோழிகள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு காரணம். வாக்கிங்குக்கு வரவில்லை.

அருணாவுக்கு ஏக சந்தோஷம். புது ஷூவை மாட்டிக்கொண்டு வேகமாக நடக்கத்தொடங்கினாள். என்ன ஆச்சரியம்! கோச் சொன்னது முற்றிலும் உண்மை. பேச்சைக் குறைத்ததால் வேகம் அதிகரித்து இருந்தது. கூடவே டென்ஷனும் குறைந்திருந்தது. வாக்கிங்... கூட்டணி போர் அல்ல; கொழுப்புக்கு, பருமனுக்கு எதிரான ஒன்மேன் வார் என்பது புரிந்தது.

இப்போதுதான் 'வாக்' பிடிபட்டிருந்தது. ஆனால், இப்போது புது பிரச்னை

ஒன்று முளைத்திருந்தது. அதாவது ஜிம் ஆரம்பித்ததிலிருந்து உச்சி முதல் பாதம் வரை ஒரு இன்ச் விடாமல் மரணவலி வலித்தது. கோச்சிடம் சொன்னால், அவள் சர்வசாதாரணமாக 'எல்லாருக்கும் அப்படித் தான் இருக்கும். கொஞ்ச நாளில் சரியாயிடும்' என்று தேய்ந்துபோன ரெக்கார்டு போல் அதையே சொல்லிக்கொண்டிருந்தாள்.

லக்ஷ்மி மோகன்

இப்போது மூவ், அயோடெக்ஸ் மற்றும் பலப்பல தைலங்களும் ஸ்பிரேக்களும், வலி நிவாரணிகளும் வீடு முழுக்க இறைந்துகிடந்தன. இருவரும் ஒருவருக்கொருவர் மாற்றி மாற்றி தேய்த்து விடுவதற்கே சரியாயிருந்தது. **(தொடரும்)**

**உடல் எடை கூட காரணங்கள்**

1. தைராய்டு குறைவாக சுரத்தல், 2. அட்ரீனல் சுரப்பி அதிகமாக சுரத்தல், 3. கொழுப்பு, மாவு உணவுகளைத் தொடர்ந்து அதிக அளவில் உண்ணுதல், 4. எடுத்துக்கொள்ளும் கலோரியைச் செலவிடாமல் மேலும் மேலும் கொடுக்கும்போது அதிகரிக்கிறது, 5. பிட்யூட்டரி சுரப்பு அளவுக்கதிகமாய் உற்பத்தியாவது, 6. பரம்பரைவாகு - குடும்பத்தில் பரம்பரையாகக் காணப்பட்டால் குழந்தையிலிருந்தே மருத்துவரின் ஆலோசனையை எடுத்துக்கொண்டால் கண்டிப்பாகத் தவிர்க்க முடியும், 7. ஸ்டீராய்டு மருந்துகளை அதிகம் உபயோகித்தல், 8. ஹைறப்போ தாலமஸ் குறைபாடு. பசியுணர்வு அதிகம் ஏற்படுகிறது. அதனால் அதிகம் சாப்பிடத் தூண்டுகிறது. வளர்சிதை மாற்றத்தில் தடையை உண்டாக்கி, கொழுப்பு செல்களின் எண்ணிக்கையைக் கூட்டி எடையளவு கூட ஆரம்பிக்கிறது.





# பூவாடைக்காரி புன்னகைத்தால்

'**எ**ங்கள் பூவாடைக்காரி
புன்னகைத்தால் போதும்
புயலாகச் சுழன்றடிக்கும்
பொல்லாத துயரமெல்லாம்
போகக்கென சுருண்டோடும்'

- இப்படி எங்க குலதெய்வம் பூவாடைக்காரி கமலாம்பாள் மேல எங்க தாத்தா பாட்டாப் பாடுவாரு.

சுமார் இருநூறு வருடங்களுக்கு முன்னால் தூத்தூர் என்ற கிராமத்தில் தன் கணவருடன் வசித்துவந்தார் கமலாம்பாள். எங்களின் முன்னோருக்கு உறவினர். ஒருமுறை காசிக்குச் சென்று விஸ்வநாதரையும், அன்னை விசாலாட்சியையும் தரிசிக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது இருவருக்கும்.

தூத்தூரில் இருந்து கிளம்பி திருமழபாடி வந்தனர். இங்கிருந்த உறவினர்களிடம் (எங்கள் முன்னோரிடம்) விடை பெற்றுக் கிளம்பினர்.

காசி யாத்திரை என்பது அந்நாளில் எளிதல்ல. முழுக்க முழுக்க நடைப்பயணம் தான். மாதக்கணக்கில் நடந்து காசியை அடைந்தனர். விஸ்வநாதரையும், விசாலாட்சியையும் வழிபட்டுக் குளிர்ந்தனர்.

காசியை ஆண்ட மன்னர், அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தார். இருவரும் அங்கேயே தங்கிவிட்டனர். கங்கை நீராடல், விஸ்வநாதர் தரிசனம் என்று பொழுதுகள் கழிந்தன. முதுமை அவர்களைச் சமீபித்தது.

ஒருநாள், ராஜசபைக்குச் சென்றனர் இருவரும்.

''ஊருக்குப் புறப்பட்டுவிட்டீர்களா?'' என்றார் மன்னர். உடனே கமலாம்பாள் சொன்னார்:

''இல்லை. வேறொரு செய்தி சொல்ல வந்தோம். வரும் வெள்ளிக்கிழமை என் நாயகர் உடலை உகுக்கப்போகிறார். நானும் அவர் திருமேனியோடு தீயில் புகப் போகிறேன். மறுநாள் சிதையைப் பிரித்தால், என் புடைவையின் கொசுவமும், தாலியும் எரியாமல் இருக்கும். தாலியை நீங்கள் வைத்துக்கொள்ளுங்கள். கொசுவத்தை திருமழபாடியில் உள்ள என் உறவினரிடம் சேர்ப்பித்துவிடுங்கள்''

# கஷ்டப்படுத்தாத எங்க இஷ்ட தெய்வம்

# போதும்



கமலாம்பாளின் செய்தியால் அதிர்ந்தார் மன்னர். அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டார்.

அந்த வெள்ளிக்கிழமை, கமலாம்பாள் சொன்னபடியே அனைத்தும் நடந்தேறின. மறுநாள் தாலியையும் கொசுவத்தையும் கண்டெடுத்தனர். தான் வாக்களித்தபடியே, ஆள் மூலமாக கொசுவத்தை அனுப்பினார் மன்னர். திருமழபாடியில் கமலாம்பாளின் உறவினரிடம் கொசுவத்தை ஒப்படைத்த சேவகன் சொன்னான்:

''ஐயா, இதை பிரம்புக்கூடையில் வைத்து வழிபடுங்கள். உங்கள் பரம்பரையை கமலாம்பாள் காப்பாள். வழிபடுவோருக்கு வழிகாட்டுவாள்.''

அன்றுமுதல் தலைமுறை தலைமுறையாக இந்த வழிபாடு நடைபெற்று வருகிறது. ஆண்டுதோறும் சித்திரை மாதம் மூன்றாவது வெள்ளிக்கிழமையன்று எங்கள் வம்சத்துக்காரர்கள் ஒன்றாய்க் கூடுவோம். இருபத்தியொரு வாழை இலை போட்டு சுமங்கலிப் பிரார்த்தனை நடக்கும்.

மறுநாள் வெங்கடேசப் பெருமாளுக்குச் சமாராதனை நடக்கும். அன்று கமலாம்பாளின் பக்தர்கள் எல்லாரும் கலந்து கொள்வார்கள்.

வருடம் ஒருமுறை பங்காளிகள் ஒன்று சேர்ந்து பட்டுப் புடைவை எடுத்து, அதை பிரம்புக் கூடையில் வைத்து மூடிவிடுவர். அடுத்தவருடம் எடுக்கும்போது, அது தாழம்பூ வாசனையுடன் புதிதாகவே இருக்கும். அதேசமயம், அணிந்ததற்கு அடையாளமாய் முந்தானையில் சின்ன துவாரங்கள் ஏற்பட்டிருக்கும்.

இந்தக் கூடையையோ, சுமங்கலிப் பிரார்த்தனையையோ புகைப்படம் எடுக்கக் கூடாது என்பது அம்பாளின் உத்தரவு. அதை நாங்கள் மீறுவதில்லை.

அதுபோல், அம்பாளும் அன்பரைக் காக்கிறாள். அதற்கு, பக்தர்களே சாட்சி!

- தேவி மகேஷ்

# இறந்த கடல்



* பழைய ஏற்பாடு சுவடி...

**பா**லஸ்தீனப் பிரதேசத்தில் சரித்திரம் திரும்பக் கண்டெடுக்கப்பட்டபோது, ஆண்டு 1947. அங்கே ஒரு கிராமவாசி அமைதியாக ஆடு மேய்த்துக் கொண்டிருந்தார். அவர் மேய்த்த ஆடு, ஒரு குகைக்குள் புகுந்துவிட, அதை வெளிக் கிளப்ப ஒரு சின்ன கல்லை எடுத்து குகைக்குள் விட்டெறிந்தார். உள்ளே பளிங்கு ஜாடி உடைகிற சத்தம்.

அந்தக் குகை இரண்டாயிரம் வருடமாக, பழைமையைப் பத்திரமாகப் பாதுகாத்து வைத்திருந்ததை அறியவந்தபோது, உலகம் பாலஸ்தீனத்தைப் பார்த்து மூக்கில் விரலை வைத்தது. இல்லையா பின்னே? ஆதியாகமம் என்ற விவிலியத்தின் பழைய ஏற்பாடு பகுதிகள். அவை அங்கே தோல் துண்டுகளில் எழுதிய குறிப்புகளாக, பத்திரமாக பட்டுத்துணியில் கட்டிப் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்தன. ஏசு கிறிஸ்து காலத்துக்கு முற்பட்ட; அவர் காலத்தைச் சேர்ந்த ஹீப்ரு பைபிள் பகுதிகள் அவையெல்லாம்.

அடுத்த எட்டாண்டுகளுக்குள், அதாவது 1955 முடிவதற்குள், அதே பகுதியில் இன்னும் பத்து குகைகளும் அவற்றில் பாதுகாத்து வைக்கப்பட்ட இது போன்ற மற்ற சுவடிகளுமாக மொத்தம் பதினைந்தாயிரத்துக்கும் மேற்பட்ட பகுதிகள் கண்டெடுக்கப்பட்டன. உலகத்தின் பழைமையான மொழிகளான ஹீப்ரு, கிரேக்கம், அராபிக் மொழிகளில் எழுதப்பட்ட குறிப்புகள் இவை. உலர்ந்த தோல் படலங்களிலும், காகிதத்தின் முதல் வடிவமான பாப்பிரஸிலும் விசேஷமான மசியைக் குழைத்து, வரிவரியாகக் கையால் எழுதிப் பாதுகாத்து வைத்திருந்தனர்.

குறிப்புகள் கண்டெடுக்கப்பட்ட பாலஸ்தீனிய மேற்குக்கரை பிரதேசம் 'இறந்த கடல் பகுதி' என்று குறிப்பிடப்படுவதால், இவற்றுக்கும் 'இறந்த கடல் சுவடிகள்' (Dead Sea Scrolls) என்ற பெயர் வந்தது.

அருங்காட்சியகத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்ட சுவடிகளைக் கையாள, உலகிலேயே நான்கே நான்கு பொறுப்பாளர்களுக்கு மட்டுமே அதிகாரம் இருக்கிறது. ஒருபுறம் பதவுரை, பொழிப்புரை பற்றி விவாதம் நீண்டு கொண்டே போக, இன்னொரு புறம் சுவடிகள் அழியக்கூடிய நிலை. இரண்டாயிரம் ஆண்டுகள் குகைக்குள் பத்திரமாக இருந்த தோல் பரப்பு எழுத்துகள், நம்முடைய நாகரிக காலகட்ட சூழலுக்கு ஈடுகொடுக்க முடியா

* இன்ஃப்ராரெட்



# டிஜிட்டல் தேன்டீன்




மல் கொஞ்சம் கொஞ்ச மாக அழிந்துவருகின்றன. மக்கி மறையும் எழுத்துக் களை சிறிதும் பிசகாமல் பிரதி செய்து, இதுவரை படிக்காத வரிகளையும் படிக்கமுடியுமா? வல் லுனர்களின் ஏக்கம் தீர டெக்னாலஜி வழிசெய்யப் போகிறது. இது சாமானி யனுக்கும் அந்த அறிவுப் பெட்டகத்தைத் திறக்கும்

# சுவடிகள்



ஒரு பிரமாண்டமான முயற்சி என்றே சொல்ல லாம்.

இன்ஃப்ராரெட் புகைப் படத் தொழில் நுட்பம் இங்கே உதவப்போகிறது. குளிரூட்டப்பட்ட ஒரு சிறிய பரிசோதனைச் சாலை. சுவர்கள் எல் லாம் வெப்பத்தை வெளி யேற்றாதபடி சாம்பல் வண்ணம் பூசப்பட்டவை.

அங்கே ஒவ்வொரு சுவடித்துணுக்காக எடுத்துப் பிரித்து, ஒவ்வொன்றின் பிம்பத் தையும் படியெடுத்து கம்ப்யூட்டரில் சேகரிக்கப் போகிறார்கள். இந்தத் தொழில்நுட்பம், ஒவ்வொரு துணுக்கிலும் மங்கி மறைந்த எழுத்துகளையும் கெல்லி எடுத்து கம்ப்யூட்டர் நிழற் படத்தில் அழியாமல் பதித்துவிடும். ஒரே மசியால் எழுதப்பட்ட துண்டுகள், ஒருவரே எழுதிய கையெழுத்துப் பிரதிகள் என்று நுணுக்கமாகப் பிரிக்கவும் கம்ப்யூட் டர் வழி செய்வதால், இவற்றைச் சங்கிலியாகக் கோர்க்கும் வேலை எளிதாகிறது. மேலும், எந்தத் துணுக்கு எப்போது சிதையலாம் என்ற செய்தி யும், இன்னொரு தொழில்நுட்பமான இமேஜிங் ஸ்பெக்ட்ரோஸ்கோப்பி மூலம் சுவடிகளைத் தொடாமலேயே தெரிந்துவிடும். வருமுன் காக்கலாம் இனி.

இது மாத்திரமில்லை. மொத்த உலகமுமே எந்த வித சிரமமும் இல்லாமல் சுவடிகளை ஆராய, இன் டர்நெட்டில் இந்தத் தகவலும் படமும் வெளியாகும். இது முடிய இன்னும் ஏழெட்டு ஆண்டுகள் காத் திருக்கவேண்டும். எது எதற்கோ காத்திருக்கும்போது, அறிவைப் பெற காத் திருப்பதில் தப்பில்லை. -இரா.முருகன்



# சாமி

**கோ**டை விடுமுறைக்கு ஐந்து வயது மகள் அனிதாவை அழைத்துக்கொண்டு சொந்த கிராமத்துக்குச் சென்றிருந்தான் ரவி. மகளுக்கு விவரம் தெரிந்தபின் கிராமத்துக்குச் செல்வது இதுதான் முதல் முறை.

"அது என்ன டாடி...? இது என்ன டாடி...?" என கண்களில் ஆச்சர்யம் தெறிக்க கேட்டுக்கொண்டே வந்தாள். அவர்களது குலதெய்வம் கோவிலுக்கு அழைத்துச் சென்றான். ஆலமரத்தடியில், முட்புதர்களுக்கிடையில், இருந்தது அந்த மண் சிலை.

"சாமி காதுல போயி எது வேணுமோ அதை வேண்டிக்க...!"

"சாமிக்கு காது கேட்குமாப்பா...?"

"ம்... இது கிராமத்து சாமி... ரொம்ப பவர்புல்...! வேண்டிக்கிட்டது அப்படியே நடக்கும்!"

"சாமிக்கு காது கேட்கும்னா, கண்ணும் தெரியும்தானே...?"

"ஆமா!"

"அப்ப நோஸ்கம் ஸ்மல் பண்ணும்தானே?"

"ஆமா!"

"அப்ப எப்படி சாமி இங்கே இருக்கு...?"

அனிதா காட்டியதை அப்போதுதான் கவனித்தான். சாமி சிலை அருகே இறந்து உடல் உப்பிய நாயொன்று துர்நாற்றம் வீசியபடியிருந்ததை இப்போது உணர நேர்ந்தது. பதில் சொல்ல முடியாத இயலாமையை புன்னகையால் மறைத்தேன். ●

வானவன்



"**எ**ன்ன ஐயா... வெளிய புறப்பட்ட மாதிரி தெரியுது?"

"ஆமாப்பா... டவுன் வரைக்கும் போயிட்டு வரணும்..."

"எப்ப திரும்புவீங்க..."

"மதியத்துக்கு வந்துடுவேன்... காதியில கதர் கண்காட்சி நடக்குதாம்... போயிட்டு வேட்டி, சட்டை துணி



# ஒரே ஒரு புடைவை

நகரின் மையப்பகுதி. பிரமாண்டமாக வளர்ந்து நின்றது அந்தத் துணிக்கடை. கடையின் முன்பகுதியில் வரிசையாக அலங்கார பொம்மைகள். நேரத்தோடு நுழைந்தாள் கடையின் ஊழியர் மாலதி.

பொம்மைக்கு உடுத்தவேண்டிய புதிய புடைவைகளையும், அதன் விலை நிரப்பப்பட்ட துண்டுக் காகிதங்களையும் கொடுத்தார் முதலாளி. பொம்மையில் இருந்த பழைய உடைகளை எடுத்துவிட்டு, பொம்மையைத் துடைத்து புதிய விலையுயர்ந்த புடைவையை அணிவிக்க, அவளின் விரல்கள் கொசுவத்தை அழகாக மடித்துக் கொண்டிருந்தது.

காதுக்குள் ஒலித்துக்கொண்டே இருந்தது, கொசுவத்தின் மடிப்பு போல, மீண்டும் மீண்டும் அம்மா சொன்னது.

''சாயங்காலம் வரும்போது மறக்காம ஆச்சியம்மா வீட்டுக்குப் போய், 'இன்ஸால்மென்ட்டில் ஒரே ஒரு புடைவை வேணும்'னு கேட்டிருந்தேன் வாங்கியாந்திரு மாலு.'' ●





# சுதேசி

எடுத்துக்கிட்டு வரலாம்னு போறேன்...''

''ஆமாம்... நீங்க எப்பவும் கதராடைதான் உடுத்துவீங்களா?''

''அப்பவே உண்டான பழக்கம் அது.. வெளிநாட்டு பொருட்களை வாங்கக்கூடாது... பயன்படுத்தக்கூடாதுன்னு...''

''அது சரிதானே? ஆமாம் இப்ப பையன் எந்த நாட்டில வேலை பாக்கறாரு?''

''கனடாவில இருக்கானில்ல....'' ●



"ஆக்க, காக்க, அழிக்க மூன்றுக்கும்
கருவி எங்க புன்னகைதான்"

புகைப்படங்கள் :
இரா.சண்முகசுந்தரம்

"வறண்ட நிலத்திலும்
வசந்தம் முளைக்கும் எதிர்ப்பும் என்னை
எழுந்து வணங்கும்"



"உதட்டின் புன்னகை
உலகுக்குத் தெரியும் கண்களி
புன்னகை
காதலனுக்கே புரியும்"

# இந்தப் பு
# எ



"சிவனேன்னு போற
காலத்துலயும் என்ன மாதிரி
சிடுக்கில்லாமல்
சிரிக்கிறவன் சீமான்"

"தண்ணி வெட்டு
வராம இருக்க குண்டுச் சட்டி
குளியல்னு
அப்பத்தா சொல்லிச்சி"



னகை

னு வலை?

# "மூன்றாவது அணி மூழ்கிவிட்டது!"

# – யஷ்வந்த் சின்ஹா பேட்டி

**'அணுசக்தி ஒப்பந்தம்' குறித்து சொற்பொழிவாற்ற சமீபத்தில் சென்னை வந்திருந்தார் முன்னாள் மத்திய நிதியமைச்சர் யஷ்வந்த் சின்ஹா. அவரிடம் பேசியதிலிருந்து...**

***ப.சிதம்பரத்துக்குப் பதிலாக நீங்கள் நிதியமைச்சராக இருந்திருந்தால் நிலைமையை எப்படிச் சமாளித்திருப்பீர்கள்?***

''நான் நான்கு வருடங்கள் இந்தியாவின் நிதியமைச்சராக இருந்திருக்கிறேன். அப்போது பணவீக்கத்தைக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தோம். பணவீக்கம் அதிகரித்தபோது, வெறுமனே பணப்புழக்கத்தை இறுக்கும் 'மானிடரி' நடவடிக்கைகளை எடுப்பதற்குப் பதிலாக, நிர்வாக ரீதியிலான, குறுகிய காலத்தில் பயனளிக்கக்கூடிய நடவடிக்கைகளை எடுத்தேன். அதற்கு நல்ல பலன் கிடைத்தது. ஆனால் இவர்கள் அவற்றைச் செயல்படுத்த முற்படவில்லை.''

***கச்சா எண்ணெய் விலை ஏற்றம் மட்டும்தான் இந்தியாவில் பணவீக்கத்துக்குக் காரணமா?***

''கச்சா எண்ணெய் விலை ஏற்றமும் ஒரு காரணம். ஆனால், அது மட்டுமே காரணமல்ல. பெட்ரோலிய நிறுவனங்களின் நிதிநிலைமை மிகவும் மோசமாக இருக்கிறது. பெட்ரோலியப் பொருட்களுக்கு அரசாங்கம் அளிக்கும் அபரிமிதமான மானியம் பெரும் சுமையாக இருக்கிறது.''

***பணவீக்கம் மீண்டும் ஒற்றை இலக்கத்துக்கு எப்போது வரும்?***

''முதலில் பணவீக்கத்துக்கும், விலைவாசி ஏற்றத்துக்கும் உள்ள வித்தியாசத்தைப் புரிந்துகொள்ளவேண்டும். பணவீக்கம் என்பது விலைவாசி உயரும் விகிதம். பணவீக்கம் நிலைப்பட்டு விட்டது என்று நிதியமைச்சர் சிதம்பரம்கூட சொல்கிறார். விலைவாசி இமாலய உயரத்துக்குச் சென்று அங்கேயே நிற்கிறது என்பதால், மக்களுக்கு என்ன பலன்? அரசாங்கம் எடுத்திருக்கும் 'மானிடரி நடவடிக்கைகள்' மட்டுமே விலைவாசியைக் கட்டுப்படுத்த உதவாது. அபரிமிதமான விவசாய விளைச்சலுக்குப் பிறகும்கூட விலைவாசி உயர்ந்துகொண்டே இருக்கிறது என்பது கவலைக்குரியது.''

***''மத்திய அரசு அறிவித்துள்ள கடன் தள்ளுபடி, உண்மையில் எந்த அளவுக்கு***

***ஏழை விவசாயிகளுக்குப் பயனளிக்கும்?***

''மிக மோசமாக கடன் பளுவில் தத்தளிக்கும் விவசாயிகளுக்கு, இந்த அறிவிப்பால் எந்தப் பலனும் இல்லை. விவசாயிகள் தற்கொலை மிக அதிகமாக இருக்கும் விதர்பா பகுதியில் விவசாயிகள் இதனால் பலன் பெறவில்லை. கடன் தள்ளுபடிக்கு, இவ்வளவு பணம், இந்தக் குறிப்பிட்ட காலத்தில், இந்த வகை வங்கிகளிடமிருந்து கடன் வாங்கி இருக்க வேண்டும் போன்ற கண்டிஷன்கள் உண்டு. அதனால் பலன் பெறுபவர்கள் மிகவும் குறைவு. இன்னொரு கவனிக்கத்தக்க விஷயம், நம் நாட்டில் ஏராளமான விவசாயிகளுக்கு வங்கிகளிலிருந்து கடன் கிடைப்பதில்லை.''

***சராசரியாக தினம் ஒரு கிராமப்புறத்தில் இயங்கும் வங்கிக் கிளை மூடப்படுவதாக ரிசர்வ் வங்கியின் அறிக்கை கூறுகிறதே?***

''இது மிகவும் கவலைக்குரியது. இதனால், விவசாயிகள் மட்டுமில்லை; கிராமப்புற கைவினைக் கலைஞர்கள், வங்கிக் கடன்களை நம்பியிருக்கும் சுய உதவிக் குழுக்கள் என்று இதன் பாதிப்பு மிகவும் அதிகமாக இருக்கும். இது மிகவும் முக்கியமான பிரச்னை. உடனடியாகக் கவனிக்கப்படவேண்டும்.''

***மூன்றாவது அணியினால், பா.ஜ.க.வின் வெற்றிவாய்ப்பு பாதிக்கப்படுமா?***

''மூன்றாவது அணியினர், மாயாவதியைத் தங்களது பிரதமர் வேட்பாளராக முன்நிறுத்தினார்கள். ஆனால், மாயாவதி, மூன்றாவது அணியிலிருந்தே வெளியேறிவிட்டார். உ.பி.யில் உள்ள எண்பது பாராளுமன்றத் தொகுதிகளுக்கும் தனது கட்சி வேட்பாளர்களை அறிவித்துவிட்டார். மூன்றாவது அணி மறுபடியும் மண்ணைக் கவ்விவிட்டது. இதனால் உ.பி.யில் பா.ஜ.க.வின் வெற்றி வாய்ப்புகள் பாதிக்கப்படாது.''

சந்திப்பு :
**எஸ். சந்திரமௌலி**



# இடம் பெயர்தல்

தொழுவத்தை இடித்து
ஒரு அறை வேண்டுமெனக்
கேட்டதால்

அடிமாட்டிற்கு விற்றுவிட்டு
அறை உருவாக,
சும்பூட்டரும் நானும்
அவ்வறையில் ஒடுங்கினோம்.

அம்மாவுக்கு தான்
எதையும் பேச
யாருமே இல்லாது போனார்கள்.

தாமிரபரணியில் குளித்த தேகமென
அவ்வப்போது அலுத்துக்
கொள்கிறாள் கிழவி.
இப்போதும் ஊரிலிருந்து
கருப்பட்டியும் அப்பாவுக்கு பீடிக்
கட்டுகளும்
அனுப்பிக்கொண்டிருக்கிறார்
பெருமாள் சித்தப்பா.

கருப்பட்டி காப்பியில்
பொட்டுக்கடலை போட்டுக்
குடிக்கிறபோதெல்லாம்
ஊர்க்கதைகளைப் பேசத்
தவறுவதில்லை கிழவி.

தனது பாம்படத்தைக் கழற்றி
எப்போதாவது சுத்தம் செய்கையில்
பீத்திக்கொள்வாள்,
அவளது கலியாணத்தில்
போட்டதென.

மேலுக்கு முடியாமல் கிடந்தபோது
தனது பாம்படத்தை அம்மாவிற்குக்
கொடுத்தபடியே இறந்துபோனாள்.

நா பெத்த மக்கா - யென
வாரியணைத்துக் கொஞ்சுகிற
கிழவி
போனதிலிருந்து
வீட்டில் யாரும் பேசுவதே
இல்லை
ஊரைப் பற்றி.

- பாக்கியம் சங்கர்

# அன்பு வேறு; அஹிம்சை வேறு!

உலக விவகாரங்களில் யுத்தம் முதலியனவும் அத்தியாவசியமாகிவிடுகிற நிர்ப்பந்தம் ஏற்படுவதுண்டு. சிலருக்குத் தண்டனை தர வேண்டி நேருகிறது. ஆனால் யுத்தம் செய்யும்போதும், தண்டனை தரும்போதும்கூட எதிராளியிடம் துவேஷம் கொள்ளாமல் அன்புடனேயே செய்யவேண்டும், காரியம் எப்படிப்பட்டதாக இருந்தாலும் காரியம் செய்கிற மனசில் அன்பு தவிர வேறெதுவும் இருக்கக்கூடாது. அன்பு வேறு; புத்தரும் காந்தியும் சொன்ன அஹிம்சை வேறு. அன்பினால் லோக க்ஷேமத்தைச் செய்யும்போது, தப்புச் செய்பவர்களுக்கு ஹிம்சை தருவதைத் தவிர்க்க முடியாமற் போகலாம். அப்போது ஹிம்சையில் தோஷமும் இல்லை. ஆனால் தண்டனை பெறுகிறவர்களிடமும் நம் மனசில் அன்பே இருக்கவேண்டும். லோக க்ஷேமத்தையும் - அதாவது இனிமேலும் இதே கெடுதல்களைச் செய்து அவன் பாபத்தைப் பெருக்கிக் கொள்ளக்கூடாது என்பதையும் உத்தேசித்தே அவனுக்கு ஹிம்சை தரவேண்டியிருக்கிறது என்ற உணர்வோடு சிட்சிக்கவேண்டும். காமம், குரோதம், துவேஷம், வஞ்சனை இவற்றைப் பூரணமாக நீக்கிவிட்டு, லோக க்ஷேமத்துக்காக எந்தக் காரியமும் செய்யலாம். அன்பு ஒன்றே சகல காரியங்களுக்கும் வழித்துணை (guide)யாகிவிட்டால் உலகில் பல தீமைகள் தானாகச் சிறுகச் சிறுக மறைந்து போகும். இது என்னுடைய உபதேசம் (message) அல்ல; இதுவே பாரத தேசத்தின் சகல ரிஷிகளும் முனிவர்களும் தந்திருக்கிற உபதேச சாரம்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**



## அருள்வாக்கு

**ச**ர்வதேச அளவில் மைக்ரோசாஃப்ட் நிறுவனம் சமீபத்தில் நடத்திய ஆன்லைன் தேர்வுப் போட்டியில் அதிக மதிப்பெண்கள் பெற்று, ஆச்சர்யப்பட வைத்திருக்கிறாள் லவினாஸ்ரீ. இந்த எட்டு வயதுக்குள் வேறு யாருமே பெற்றுக் குவித்திடாத அளவுக்கு விருதுகள் அவளைத் தேடிவந்து குவிந்துள்ளன.

அப்பா கே.முனிசாமி, தொழில் முகவர். அம்மா இந்துலேகா, இல்லத்தரசி. இவர்களின் இரண்டாவது பெண் லவினாஸ்ரீ. மதுரை, அண்ணா நகரில் அவர்களது ஃபிளாட்டைத் தேடிக்கண்டு பிடித்து அவளைக் காணச்சென்றோம். ''இப்பத்தானே இங்ஙன வெளையாடிகிட்டு இருந்தா... எங்கே போனாள்னு தெரியலையே?'' எனச் சொல்லிக்கொண்டே பால்கனி பக்கம் சென்றார் இந்துலேகா. வெளியே வந்து பால்கனியில் நின்று அவர் சுட்டிக்காட்டிய பகுதியில் 'த்ரோபால்' விளையாடிக் கொண்டிருந்தாள் லவினாஸ்ரீ.

• பரிசளிப்பு விழாவில்...



# மைக்ரோசாஃப்ட்

''ஒண்ணரை வயதிலேயே ஏபிசிடி இருபத்தியாறு அட்டை எழுத்துக்களைக் கலைத்துப் போட்டு, எந்த எழுத்தைக் கேட்டாலும் சரியாக எடுத்துக் கொடுத்தாள். முதலில் வியப்பாக இருந்தது. அவளுள்ளிருக்கும் நினைவாற்றல் சக்தியினை வெளிக்கொணரும் நோக்கத்தில் திருக்குறளைச் சொல்லித் தந்தோம். தனது மழலை மொழியில் ஒப்புவித்து எங்களைத் திகைக்கவைத்தாள்.

மதுரை, விஎம்ஜே மேநிலைப்பள்ளி (மத்திய பாடத் திட்டம்)யில் எல்.கே.ஜி. சேர்ந்தபோதே, ஆயிரத்து முன்னூற்று முப்பது திருக்குறளையும் மனப்பாடமாக ஒப்புவித்து லிம்கா சாதனைப் புத்தகத்தில் இடம்பெற்றிருக்கிறாள்'' என்கிறார் அப்பா முனிசாமி.

''வீட்டில் இருந்த சிஸ்டத்தில் அவளாகவே ஏதோ விளையாட்டாகச் செய்யத் துவங்கினாள். அதன் பின்னரே கம்ப்யூட்டர் சென்டர் ஒன்றில் பயிற்சிக்கு அனுப்பி வைத்தோம். அனிமேஷன், ஃபோட்டோ ஷாப், கோரல் ட்ரா, இல்லஸ்ட்ரேட்டர்,

# ஞானி - வயது 8

பிளஸ், டிரிம் வேவர், வெப் டிசைனிங் மற்றும் 2டி, 3டி அனிமேஷன்ஸ் போன்ற பிரிவுகளில் தனது ஆறாவது வயதில் கற்றுத் தேர்ச்சி பெற்றிருந்தாள்!'' எனக் கூறுகிறார் அப்பா முனிசாமி.

''ஒரு குழந்தையின் இளம் பருவத்து விளையாட்டுத்தனங்கள் மற்றும் கட்டித்தனங்களை லவினாஸ்ரீ இழந்திருக்க நேர்ந்திருக்குமே?'' என்றால், ''எந்த ஒரு நாளிலும் படிப்பிலோ, கம்ப்யூட்டர் பயிற்சியிலோ எப்பொழுதுமே நாங்க அவளைக் கட்டாயப்படுத்தினது இல்லே. மேலும் விளையாடுறது அவளுக்கு ரொம்பப் பிடிக்கும். வீட்டிலே கூட ஸ்கிப்பிங் கயிறு, ரிங் பால் விளையாடுவாள். பேஸ்கட் பால் விளையாட்டு அவளுக்கு மிகவும் பிடித்த ஒன்று. லவினாஸ்ரீ அவளது விளையாட்டு மனத்தை என்றைக்கும் இழக்கவில்லை!'' என்கிறார் இந்துலேகா.

* லவினாஸ்ரீ

மதுரை, டான்டெம் இன்ஸ்டிடியூட் ஆஃப் கம்ப்யூட்டர் டெக்னாலஜி சென்டரில் கம்ப்யூட்டர் பயின்று வருகிறாள் லவினாஸ்ரீ. இருபத்தைந்து வயது முதல் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டோர் பங்குபெறும் கம்ப்யூட்டர் பொது அறிவு பற்றிய ஆன்லைன் தேர்வில் சிறப்பு அனுமதி பெற்று, தேர்வில் பங்குபெற்றாள். ஆயிரத்துக்கு எண்ணூற்றி நாற்பத்திரண்டு மதிப்பெண்கள் அடைந்து, உலகிலேயே இளம்வயது மைக்ரோசாஃப்ட் சாதனையாளர் விருதினை, கர்நாடக இசைப் பாடகி சுதா ரகுநாதன் கையால் பெற்றுள்ளாள். இதன் வாயிலாக 2005 ஆம் ஆண்டில் இதுபோன்ற தேர்வில் சாதனையாளர் விருது பெற்றிருந்த, பாகிஸ்தான் நாட்டின் பத்து வயதுச் சிறுமி 'அர்பா கரீம் ரந்தாஹ்'ன் சாதனையை, தனது எட்டு வயதில் எட்டிப் பிடித்து விட்டாள். ''எனது ஆசிரியர் ஷாம் அளித்த பயிற்சியே, என்னை உலக சாதனை புரியவைத்துள்ளது. எதிர்வரும் காலத்தில் கம்ப்யூட்டர் அறிவியலில் விஞ்ஞானியாக செயல்படவேண்டும் என்பதே என்னுடைய விருப்பம்!'' எனக் கூறுகிறார் லவினாஸ்ரீ.

செய்தியும், சித்திரங்களும் :

**ஸ்ரீரங்கம் திருநாவு**

# வேழம் உரித்த கஜ சம்ஹாரர்!

அறிவும் ஆணவமும் சேரும்போது அதனை வெற்றிகொள்வது எளிதல்ல. அது கோபமாகவும் ஆத்திரமாகவும் மாறி, அறிவைத் தவறான வழியிலே பயன்படுத்தத் தூண்டும். வேதங்களில் விதிக்கப்பட்ட வண்ணம் யாகங்களைச் செய்தாலே அதற்குரிய பயனைப் பெற்றுவிடலாம் என்னும் கர்மகாண்டக் கோட்பாடு தாருகா வனத்து முனிவர்கள் மனத்தில் ஆழமாய் வேரூன்றி இருந்தது. ஈசுவர சங்கல்பம் என்ற ஒன்று சேர்ந்தால்தான் காரியங்களின் பலனை அடையலாம் என்ற ஞானம் அவர்களிடம் இல்லை. அதனால் ஈசுவரன் (கடவுள்) என்ற ஒருவன் இல்லை என்கிற நிரீஸ்வர வாதிகளாக (நாஸ்திகவாதிகளாக) அந்த முனிவர்கள் இருந்தார்கள். பிட்சாடனக் கோலத்தில் வந்து தங்கள் காரியத்தைக் கெடுத்த சிவபெருமான் மீது அவர்களுக்குக் கோபமும் ஆத்திரமும்தான் வந்தது.

அதன் விளைவாக யாகத் தீயில் ஆபிசார ஹோமம் செய்து, அதிலிருந்து தீயசக்திகளை உண்டாக்கிப் பெருமான் மீது ஏவிவிட்டார்கள். (யாகத் தீயில் கசப்பு, காரம் நிறைந்த பொருள்களையும் நகம், முடி போன்றவற்றையும் இட்டு ஹோமம் செய்வதற்கு ஆபிசார ஹோமம் என்று பெயர். பகைவர்களை அழிப்பதற்காக செய்யப்படுவது).

அந்த விதத்தில் யாக குண்டத்திலிருந்து ஒரு பெரிய யானையை உண்டாக்கிப் பெருமான் மீது ஏவினார்கள். மதம் கொண்ட யானை பெருமானை நெருங்கியதும், அதன் வாய்க்குள் புகுந்து மறைந்துவிட்டார் சிவபெருமான். சூரிய சந்திரர்கள் மறைந்து இருள் சூழ்ந்தது. காலங்கள் தடுமாறின. பிரபஞ்சமே ஸ்தம்பித்து நின்றதாம். அருகில் இருந்த அம்பிகை அஞ்சி ஓடினாளாம்!

பெருமானை விழுங்கிய யானை பெரும் துன்பம் அடைந்து ஒரு குளத்தில் விழுந்து புரண்டெழுந்தது. பின் பெருமான் யானையின் உடலைக் கிழித்துக்கொண்டு வெளிப்பட்டாராம். இந்தக் காட்சியை சித்தரிக்கும் வடிவமே கஜசம்ஹார மூர்த்தியின் வடிவம்.

இந்தப் புராண வரலாறு நிகழ்ந்ததாகச் சொல்லப்படும் இடம் மாயூரத்திற்கு அருகில் உள்ள வழுவூர் என்ற திருத்தலம். அங்கு இந்தப் புராணத்தைச் சித்தரிக்கும் அழகிய பஞ்சலோகத் திருமேனி, கண்டவர் கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணம் உள்ளது.

த. கி. நீலகண்டன்



சுமார் ஐந்தடி உயரம் உள்ள திருமேனி இது. யானையின் தலை, பீடமாக அமைந்திருக்க, அதன் மீது வலது காலை ஊன்றி, இடது தொடையையும் முழந்தாளையும் இடுப்பு வரை தூக்கி இடதுகாலை மடக்கிக்கொண்டு தோற்றமளிக்கிறார். விக்ரகத்தைச் சுற்றியுள்ள பிரபாமண்டலமாக யானையின் உடற்பாகத்தின் வெளிக்கோடு விளங்குகிறது. யானையின் நான்கு கால்களும் இந்தப் பிரபாமண்டலத்திலிருந்து அறுந்து தொங்குகிறது.

வித்தியாசமான அமைப்பு கொண்ட விக்ரகம் இது. ஊன்றி கவனித்தால்தான் புரியும். பாதத்தில் இருந்து இடுப்புவரை பெருமானின் பின்பகுதியும், இடுப்புக்கு மேல் உள்ள பகுதிகளில் பெருமானின்

முன்பகுதியும் நம் கண்ணுக்குத் தெரிகின்றன. இடுப்புப் பகுதியை ஒரு திருகு திருகி நின்றால் தான் இந்த நிலை சாத்தியம்!

இடுப்புக்கு மேல் ஒரு அநாயாசமான வளைவு. அகன்ற மார்பு, விரிந்த தோள்கள், எட்டுக் கரங்கள், ஒரு ஜோடி கரங்களில் சூலமும் கபாலமும்! இன்னொரு ஜதையில் கத்தியும் கேடயமும். மூன்றாவது ஜோடிக் கரங்களில் உடுக்கையும் பாம்பும் (உடுக்கை பின்புறம் இருந்து பார்த்தால்தான் தெரிகிறது!) விளங்குகின்றன. மற்ற இரண்டு கரங்கள் நீண்டு விரிந்து, பிரபாமண்டலத்துடன் இணைந்திருக்கும் யானைத் தோலுக்குள் விரல்களை மாட்டி, கிழிக்கும்வண்ணம் தோற்றமளிக்கிறது! இன்னொரு முக்கியமான விஷயத்தைக் கவனிக்கவேண்டும். யானையின் முதுகுப் பகுதி போல் உள்ள பிரபா மண்டலத்தில் யானையின் தோல் தாறுமாறாகக் கிழிந்து தொங்குவது போல இருக்கிறது. ஒரு உலோகத் தகட்டைக் கிழித்தால் எப்படி கோணல்மாணலாகக் கிழியுமோ அந்த விதத்தில் அமைக்கப்பட்டிருப்பது கலைஞனின் கற்பனை நேர்த்தி.

இந்த உருவம் ஒரு வேகத்தையும் ஆற்றலையும் ஒருங்கிணைத்த சக்தியை தெளிவாகக் காட்டிவிடுகின்றது.

சுருட்டை சுருட்டையான கேசபாரம், நேர்த்தியான ஜடாமண்டலமாக வட்டமிட்டுச் சுழல்கின்றது. ஜடையில் நாகமும், சந்திரகலையும், மண்டை ஓடும் விளங்குகின்றன. நீண்ட காதுகளில் வளையங்கள். மார்பில் புலிநகம் கோத்த மாலையும் தாழ்வடமும் அணிசெய்ய, முப்புரி நூல் விளங்க, ஊன்றிய காலை மணிகள் கோத்த பெரிய மாலை ஒன்று அணிசெய்கிறது. அதனுடன் பின்னிப் பிணைந்து ஒரு பெரிய நாகம் யானையின் பிடரியின் மேல் படம் எடுத்து நிற்கிறது. கண்களில் கனல் தெறிக்கும் ஆக்ரோஷமான முகம் சற்றே சாய்ந்திருக்கிறது.



**'வேழத்தின் வாய்க்குள் புகுந்து மறைந்தார் சிவபெருமான். சூரிய சந்திரர்கள் மறைந்து இருள் சூழ்ந்தது. காலங்கள் தடுமாறின. பிரபஞ்சமே ஸ்தம்பித்தது'**

அருகில் நிற்கும் அம்பிகை, இந்த சொருபத்தின் உக்ரத்தைத் தாளமுடியாமல் அஞ்சி ஓடும் பாவனையில் விளங்குகிறாள். அவள் பாதங்கள் பெருமானிடமிருந்து விலகி ஓடுவதாக அமைந்திருக்கின்றன. அவள் இடுப்பில் குழந்தை வடிவில் முருகன் ஒற்றை விரலை பெருமானை நோக்கி சுட்டிக்கொண்டிருக்கிறான்.

நமக்கு அப்பர் சுவாமிகளின் தேவாரம் நினைவுக்கு வருகிறது!

விரித்த பல் கதிர் கொள் சூலம்<br>
வெடிபடு டமருகம் கை<br>
தரித்ததோர் கோல கால<br>
பைரவன் ஆகி, வேழம்<br>
உரித்து, உமை அஞ்சக் கண்டு<br>
ஒண்திரு மணிவாய் விள்ள<br>
சிரித்து அருள்செய்தார் சேறைச்<br>
செந்நெறிச் செல்வனாரே''

வழுவூர் தரிசனம் முடித்து வேறு ஊருக்குப் போனபின்னும், அங்கேயும் இந்த அழகிய வடிவே அவர் மனக்கண்ணில் நிழலாடுகிறது போலும்!

(பெருகும்)

# டூயட் கதை-5

சிவா சொன்னதை மனத்துக்குள் மறுபடி ஒருமுறை நினைத்துப்பார்த் தாள் ரம்யா...

'உன் தோற்றத்தில் ஏதோ ஒண்ணு இருக்கு ரம்யா. அது என்னன்னு எனக்கு சொல்லத் தெரியலை. ஏதோ ஒரு ஈர்ப்பு... அல்லது மனசின் தேடல். உன்னைப் பார்த்ததும் உன் கடந்தகாலம் என்ன மாதிரியா இருந்தாலும் பரவாயில்லை. உன்னைக் கல்யாணம் செய்யலாம்னு தோணுது. நீ பெரிய அழகின்னு சொல்லலை... ஆனா ஏதோ ஒரு காந்தம் உன்கிட்ட இருக்கு. யூ ஆர் சோ மாடஸ்ட்... அப்பீலிங்... ஐ லவ் யூப்பா. பழசு எல்லாத்தையுமே மறந்திடு. அது ஒரு கெட்ட சொப்பனம். என்னைக் கல்யாணம் பண்ணிக்கறேன்னு சொல்லு... நல்ல முடிவா சொல்லு.'

மனதுக்குள் விடாப்பிடியாக சிவா இம்சை செய்துகொண்டிருந்தான். பழகிய ஆறு மாசத்தில் எத்தனை கடிதங்கள், இமெயில்கள், வாழ்த்து அட்டைகள், பரிசுகள்... மனசு இளகி கரைந்து... உருகி... அவளைத் திக்குமுக்காடச்செய்தது.

சிவா ப்ரியமானவன்தான். சந்தேகமேயில்லை. அவளின் மனத்தடை விக்னேஷ். சில நிகழ்வுகளின் கசப்பு நெஞ்சின் அடி ஆழம் வரை பரவியிருக்கும். அவளிடமிருந்து விலகிப் போன விக்கியின் நினைவு போலவே.



'ஏய் யாருடி அவன். இப்படி இளிச்சு பேசிட்டு இருக்கே' பத்தாவது படிக்கும் அடுத்த வீட்டு பையனிடம் பேசியதற்கு இவளை அசிங்கமாகத் திட்டும்போது அவள் கூசிப்போவாள்.

தொட்டதற்கெல்லாம் சந்தேகம், குடி, அவளை அடிப்பது, பின் குற்றவுணர்வோடு மன்னிப்பு கேட்பது என்று அவனோடு வாழ்ந்த நான்கு வருட வாழ்க்கை நரகத்தை விட கொடுமை.

ஆண் என்பவன் இவ்வளவு மோசமானவனா? அவள் கற்பனை செய்து வைத்திருந்த அவளுடைய ஆண் மென்மையானவன். அதேசமயம்

உறுதியானவன். கவிதை எழுதுபவன். காலையில் லேட்டாக எழுந்தால் காஃபி போட்டுத் தருபவன். எல்லா விஷயங் களையும் பகிர்ந்து கொள்பவன். கோபப் படாதவன்... இன்னும் நிறைய எதிர்பார்ப்புகள். அத்தனையும்

# என் மேல் விழுந்த மழைத்துளியே!

உமா ஷக்தி

தரைமட்டமாக்கிய பெருமை விக்கிக்கு உண்டு.

''ஏண்டி... எப்பப் பாத்தாலும் எதை யாவது யோசிச்கட்டேயிருக்கே... சொல்லித் தொலை. அரைப் பைத்தியத்தை என் தலையில் கட்டி வச்சுட்டாங்க!'' என்ற போது அவளால் அழத்தான் முடிந்தது.

போதாததற்கு 'ஏன் இன்னும் குழந்தை பொறக்கலை' என்று குடைந்து கொண்டே இருந்த மாமியார் விஜயா. எனக்கென்ன என்று எப்போதும் பேப்பரும் கையுமாக ஒரு ஏளனப் புன்னகையுடன் வலம்வரும் மாமனார் சுந்தரேசன். இவர்களை நினைத் தாலே இப்போதுகூட அடிவயிறு எரியும். விஜயா ரம்யாவை கோயில் கோயி லாகச் சுற்றவைத்தாள். மண்சோறு சாப்பிட வைத்தாள். இவ ளுக்கு கொஞ்சநஞ்சம் இருந்த பக்தியைக்கூட இல்லா மல் பண்ணிவிட்ட புண்ணி யம் அவளைத்தான் சேரும். ஆன்மிக வழி ஒரு பக்க மிருக்க மற்றொரு பக்கம் ட்ரீட்மெண்ட். டாக்டர்கள், ஐவிஎஃப், ஐயுஐ, வாயில் நுழையாத புரிந்துகொள்ள முடியாத டெஸ்ட்டுகள்,

பலவிதமான எண்டோஸ்கோப்பிகள், ஸ்கானிங். என்ன செய்தும், எவ்வளவு செலவழித்தும் எல்லாம் தோல்வியில் முடிந்தது.

இவளைத் துரதிர்ஷ்டசாலி என்று தள்ளி வைக்க அவர்கள் முடிவுசெய்த போது தன்னுணர்வு பெற்று அவன் மீது டைவர்ஸ் கேஸ் போட்டாள். ஃபேமிலி கோர்ட், ஆஃபீஸ், வீடு என்று ஒரு வருடம் அல்லாடிவிட்டு கடைசியில் பிரிவு கிடைத்தபோது உடலும் மனமும் ரணமாகிப் போய்விட்டது. இந்த மட்டுக்கும் தப்பித்தோம் என்று பிறந்த வீட்டுக்கு வந்துவிட்டாள். ஒரே பிடிப்பான அப்பா இவள் துக்கத்திலேயே போய்ச் சேர்ந்துவிட்டார்.

ஹாஸ்டல் வாசத்தில் ஐந்து வருடம் ஓடியேவிட்டது. கவிதை எழுதுவது, இலக்கியக் கூட்டங்களுக்குப் போவது என்று கொஞ்சம் கொஞ்சமாக நார்மலாகிக் கொண்டிருந்தாள்.

இத்தனை நாள் எந்தச் சலனமும் இல்லை. சிவாவைப் பார்க்கும் வரை... சிவாவை ஏதேச்சையாக ஒரு இலக்கியக் கூட்டத்தில் பார்த்தாள். முதலில் புன்னகைத்தான். பதில் புன்னகை கிடைத்ததும் 'நீங்க மதுரையா?' என்று ஆரம்பித்து பிடித்த எழுத்தாளர், கவிஞர்கள் என்று வளவள என்று பேசிக் கொண்டேயிருந்தான். அவளுக்கும் அவன் பேசுவது பிடித்திருந்தது.

**ம**ணியைப் பார்த்தாள். 12.30. குழப்பம் தீருவேனா என்று அவளைக் குடைந்து எடுத்தது. கணிணியை ஆன் செய்தாள். சிவா அனுப்பிய முதல் மெயிலை வாசிக்க ஆரம்பித்தாள்.

ப்ரியமான ரம்யாவுக்கு

இமெயிலில் தமிழில் எப்படி எழுதுவது என்பதைக் கண்டுபிடித்துவிட்டேன். எப்படியோ ஏதோ ஒரு சந்தோஷமான தருணத்தில் உன்னைக் கண்டுகொண்டது போலவே இதுவும் நிகழ்ந்துவிட்டது.

இந்த அன்புருவான பெண்ணுக்கு நான் பதிலுக்கு என்ன செய்யமுடியும். அன்பு செலுத்துவதைத் தவிர... சிவா.

அவளை தினமும் சந்திக்க ஆரம்பித்தாள். ரம்யாவை தினமும் ஹாஸ்டலில் ட்ராப் செய்ய ஆரம்பித்தான். அவர்களின் புரிதல்களின் தளம் நாளுக்கு நாள் விரிவடைந்து கொண்டேயிருந்தது.

தயங்கியபடியே ஒருநாள் தான் கேட்க நினைத்த கேள்வியைக் கேட்டாள். 'நீ யாரையாவது காதலிச்சிருக்கியா சிவா. உண்மையைச் சொல்லு?'

'எனக்கு ஆட்டோகிராஃப் எல்லாம் பெருசா கிடையாது ரம்யா. என் கடந்த காலம் ஒன்றும் காதலிகளால் நிரம்பி வழியலை. எனக்குப் பிடிச்ச சில இனிமையான பெண்கள்கிட்ட நான் என்னை வெளிப்படுத்திக்கிட்டதில்லை.''

இது இந்திய தேசத்தின்
வசீகரப் புன்னகை
அஹிம்சா தத்துவத்தின்
அழியாத அடையாளம்

- விமலாதித்தன்



அவன் மனத்தில் காதல் புகுந்துவிட்ட ஒரு தருணத்தில், மிக நீண்ட இடைவெளிக்குப் பின் அதை அவளிடம் மறைக்காமல் சொல்லிவிட்டான். அழகான க்ரீட்டிங் கார்டின் உள்ளே ஒரு லெட்டர். அது அவன் வாசத்தைச் சுமந்திருந்தது.



# நீ பேசுவதை நிறுத்து நான் ரசிப்பதெல்லாம் உன் புன்னகையைத்தான்

- பா.உதயக்கண்ணன்

''ரம்யா. உன்னை எனக்குப் பிடிச்சிருக்கு. ஏன்? என்னை எனக்கு எதனால் பிடிக்கிறதோ அது போல்தான் இதுவும். உன் மீதான என் நேசம் இன்னும்கூட உயர்வான புடா தங்கம்.

வாழ்வில் உன் வயதுக்கு அதிகமான துன்பத்தை அனுபவித்து இருக்கிறாய். நீ அதனைப் பற்றி பேசும் போது உன்னிடம் நான் காண்கிற அந்தப் புன்னகை, நடந்ததை இலகுவாக எடுத்துக்கொண்டு மெல்லிய புன்னகையுடன், சில நேரம் நகைச்சுவையுடன் நீ பேசும் போது நான் பிரமித்துப்போகிறேன். அந்தப் பிரமிப்பு உன்மீதான காதலை அதிகரிக்கச் செய்கிறது. நீ பேசப்பேச நான் உன் ரசிகனாகிப் போனேன். என்னோடு அறிவார்த்தமாய் உரையாடுகிறவள். எனக்குப் பலவற்றைக் கற்றுத் தருகிறவள். என்னிடம் என் போலவே அன்பு செய்கிறவள். எனக்குச் சமமானவள். சமயங்களில் என்னிலும் சிறப்பானவள். நான் அழுதால் என்னைத் தேற்றி தைரியம் சொல்கிறவள். சமயங்களில் என்னையே தாங்கக்கூடிய வலிமை கொண்டவள்... இப்படியாக...

எந்தக் காட்டிலடி ஒளிந்திருந்தாய் என் மலரே... இத்தனை நாள் ரகசியமாய் எக்கொடியில் பூத்திருந்தாய்... காணாமல் விட்டதென் கண்கள் செய்த பிழை... காட்டாமல் ஒளித்தது காலம் செய்த துயர்' - சிவா.

இதை வாசிக்கும்போது அவள் மனது விம்மியது. எத்தகைய அன்பு, எவ்வளவு ப்ரியம்... அவன் இல்லாத ஒரு வாழ்க்கையை அவளால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. ஊர் என்ன சொல்லும். உறவுகள் கேலி பேசுமே. முப்பது வயதில் காதலா, மறு கல்யாணமா? இது கலாசார மீறல் அல்லவா? இது சாத்தியப்படுமா? ஊரைப் பற்றி எனக்கென்ன? என்னைப் பற்றி இந்த ஊர் கவலைப்பட்டதா?

ஒரு வாரம் அவனுடன் ஃபோனில் பேசுவதையும் மெயில் அனுப்புவதையும் குறைத்துக்கொண்டாள். அவளின் புறக்கணிப்பில் சிவா மனம் மிகவும் வாடிவிட்டது. அவளுக்கு ஃபோன் செய்தான்.

'ரம்யா... என்னாச்சு. ஏன் என்னைப் பாத்து பயந்து ஒளியறே? எதுவாயிருந்தாலும் சொல்லிடு. இப்படி என்னை அவாய்ட் பண்ணாதே. என்னால தாங்க முடியலை...' அவன் குரல் தழுதழுத்தது.

ரம்யாவின் மனத்திலிருந்து ஈரம் கசிந்தது. 'சாரி சிவா... நான் ரொம்ப குழம்பிப் போயிருக்கேன்.'

'இந்தக் காலத்துல ரீ மேரேஜ் எல்லாம் சர்வசாதாரணம். ஏன் உனக்கு இவ்ளோ பெரிய மெண்டல் ப்ளாக்னுதான் புரியலை ரம்.... இவ்வளவு புக்ஸ் படிக்கிறே. வேலைக்குப் போற. சுயமா யோசிக்கிறே... லைஃப் இஸ் லாங்க் மை டியர்... ஏன் என்னை மறுக்கறே?'

''உனக்குச் சொன்னா புரியாது செல்லம். நான் உன்னை நேசிக்கிறேன்.

ஆனால், உன்னவிட எனக்கு மெண்டல் மெச்சூரிட்டி அதிகம். ஒரு ரிலேஷன் ஷிப்புக்குள்ள போய்ட்டா எதிர்பார்ப் புகள் அதிகமாகிடும். கமிட்மெண்ட்ஸ் அதிகமாகும். அப்புறம் குழந்தைங்க பிறப்பாங்க. கொஞ்சம் இடைவெளி விட்டு... பிறக்காமலும் போகலாம்.. நான் இந்த விஷயத்துல தோத்துப் போனவ... அப்படி காலம் கடந்து பிறந் தாங்கன்னா அவங்க வாழ்க்கையை பாக்கணும். இது ஒரு பெரிய ரேஸ்... சளைக்காம ஓடணும்... இடையில நிறைய பேர் கேள்வி கேப்பாங்க. சில பேர் காறித் துப்புவாங்க. அதையெல்லாம் மீறி வாழணும்.



**'என் மேல் விழுந்த மழைத்துளியே!' பாடலை இனியும் சிவா பாடினால் அவன் கிரேட்தான்.**

எனக்கு எனர்ஜி இல்லை சிவா... நாம இப்பவே சந்தோஷமாத்தானே இருக் கோம். எதுக்கு கல்யாணம்ங்கிற ஒரு கூட்டுக்குள்ள அடையணும்... உன் சுதந் திரத்தையும் என் சுதந்திரத்தையும் நாமே ஏன் அழிச்சுக்கணும்... எனக்கு கல்யாண வாழ்க்கை ஒரு அவெர்ஷன் ஆயிடுச்சு. என்னால மறுபடியும் அதுக்குள்ள செட் ஆக முடியும்னு தோணலை...''

''ரம்யா... உன்னை நான் கட் டாயப்படுத்தலை... நேத்து என்னோட அப்பா அம்மாகிட்ட பேசிட்டேன். அவங்க சரின்னுட்டாங்க. நாளைக்குச் சொல்லு... நல்ல முடிவா சொல்லு. உன்னை எந்த விதத்திலயும் நான் கட் டாயப்படுத்தலை.''

தொலைபேசி துண்டிக்கப்பட்டது. அடுத்தநாள் மனம் தர்க்கத்திலேயே போனது. இரவு மணியைப் பார்த்தாள். இரண்டரை.... போனை எடுத்தாள். அவன் நம்பரைப் போட்டாள். இரண்டே ரிங்கில் அவன் எடுத்தான்.

''ரம்யா... நீ இன்னும் தூங்கலியா?''

''ம்''

''சொல்லுடா. உடம்பு சரியில் லையா?''

''சிவா நான்''

''ம்...சொல்லு... சொல்லு...''

''நீ சரின்னா... கடைசிவரை நண்ப னாவே பழகு. நான் இறக்கும்வரை உனது தோழியாவே இருக்க விரும் புறேன். காதல் எதிர் பார்ப்பு மிகுந்தது. நட்பு தியாகம் கொண்டது. ரெண் டுக்கும் என்ன வித் யாசம். காமம்தான். நீ எங்கிட்ட காமத்தை எதிர்பார்க்கல இல்ல. அதுதானே நிஜம். அப்புறம் கல்யாணம் எதுக்கு? நீ எனது தோழன். நான் உனது தோழி. நீ நல்ல பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்க. நான் உன் ஃபிரண்டாவே இருக்கிறேன். ஓ.கே. செல்லம். நாளைக்குக் கூட்டத்தில் பார்க் கலாம். பை!''

அன்று இரவு நிம்மதியாகத் தூங்கினாள் ரம்யா. 'என் மேல் விழுந்த மழைத் துளியே!' பாடலை இனியும் சிவா பாடி னால் அவன் கிரேட்தான்!



# அணிய முடியாப் பொன்னகை

தங்கத்தின் விலை ஏறிக்கொண்டுதான் இருக்கிறது. அதனால், நகைகள் வாங்குவது குறையப்போவதில்லை. அணிவதற்காக மட்டுமல்ல; சேமிப்புக்காகவும், அவசரத் தேவைகளுக்காகவும்கூட நகைகளை வாங்குகிறார்கள்.

நகைகள் செய்யப்படுவதே அணிவதற்காகத்தான். ஆனால், அணியவே முடியாத மிகப் பெரிய வளையல் ஒன்றை, சமீபத்தில் காட்சிக்கு வைத்திருந்தனர். நாகர்கோவில் டாடா பொன்னகைக் கூடத்தில் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்த அந்த வளையலின் எடை 24.505 கிலோ.

முப்பது பொற்கொல்லர்கள் சுமார் எட்டு மாதங்கள் உழைத்து இந்த வளையலை உருவாக்கியிருக்கிறார்கள். 22 காரட் தங்கத்தில் உருவாக்கப்பட்டுள்ள இந்த வளையலின் இன்றைய மார்க்கெட் மதிப்பு மூன்று கோடியே இருபத்தி ஆறு லட்சத்து நாற்பதாயிரத்து அறுநூற்றுப் பதிமூன்று ரூபாய் (3,26,40,613).

1830 மி.மீ. (6.1 அடி) விட்டம் கொண்ட இந்த வளையலை, பிரமிப்புடன் தொட்டுப் பார்த்துச் சென்றது பெண்கள் கூட்டம். விளம்பரத்துக்காகச் செய்யப்பட்டதுதான் இந்த வளையல் என்றாலும், அதன் பிரமாண்டமும் வேலைப்பாடுகளும் வசீகரப்படுத்தியது நிஜம்.

- த.இ.தாகூர்



# ஓவியப் புன்னகை

லியோனார்டோ டாவின்சி வரைந்த இந்த மோனலிசா ஓவியம் ஐந்நூறு வருடங்களைக் கடந்துவிட்டது. புன்னகைக்காகவே உலகப் பிரசித்தி பெற்றது இந்த ஓவியம். உலகை வசீகரிக்கும் ஓவியப் புன்னகையில் இன்றும் இதுதான் முதலிடம். இது காலத்தை வென்ற ஓவியக் கலைஞனின் புன்னகையும்கூட.

- சூர்யா

# கட்டாய விளையாட்டு!



இந்தியாவின் முதல் தங்க மகன் அபினவ் பிந்த்ரா, சென்ற வாரம் சென்னைக்கு வருகை தந்திருந்தார். அதற்கு ஒருநாள் முன்பு சென்னைக்கு பிரதமரும் விஜயம் செய்திருந்தார். ஆனால் அபினவ் பிந்த்ராவின் வரவுதான் மிக முக்கியமாகக் கருதப்பட்டது. சென்னையில் அவரைத் தாங்கிப் பிடித்துக் கொள்ள ஆளாளுக்குத் தயாராக இருந்தார்கள். அவருடைய டிரேட் மார்க் புன்னகை, மாணவர்களிடையே மயக்கங்களை வாரியிறைத்தது. அப்துல் கலாமுக்கு அடுத்ததாக, அபினவ் பிந்த்ராவே இந்தியச் சிறார்களின் கனவு நாயகனாக இருப்பார் என்று தோன்றுகிறது.

அபினவ் சென்னையில் இருந்த நாளில்தான், தமிழ் நாளிதழ் ஒன்றில் வாள் சண்டை வீராங்கனை கார்த்திகாவின் பேட்டி ஒன்று வெளிவந்தது. 'என் அப்பா டீக்கடை வைத்திருக்கிறார். வாள் வாங்கவேண்டும் என்றால், அப்பா கூடுதலாக நான்காயிரம் டீ ஆற்ற வேண்டுமே என்று எண்ணி விளையாட்டிலிருந்து விலகிவிட்டேன்' என்று உருக்கமாகப் பேட்டி அளித்திருந்தார் அந்தப் பெண்.

ஆனால் அபினவுக்கு விதிக்கப்பட்ட வாழ்க்கை வேறு. பல நூறு கோடிகளுக்குச் சொந்தமான தொழிலதிபரின் மகன். சொந்தமாக விளையாட்டுக்கூடம் ஒன்று அவருக்கு உள்ளது. பீஜிங் துப்பாக்கிச் சுடும் அரங்கில் நின்றபோது அபினவ் ஒரு வித்தியாசத்தையும் உணர்ந்திருக்கமாட்டார். ஏனெனில் ஒலிம்பிக் போட்டிக்கான தரத்தைக் கொண்டதுதான் அவரது பயிற்சிக்கூடம்.

ஒன்றல்ல இரண்டல்ல, அடிப்படை வசதிகள் வேண்டி விளையாட்டு வீரர்கள் ஆயிரம் பேட்டிகள் கொடுத்துவிட்டார்கள். ஆனால் எல்லா கோரிக்கைகளும் அரசால் சுலபமாக உதாசீனப்படுத்தப்படுவதால், கடைசியில் ஜீவாதாரத்துக்காக தம்முடைய ஒரே சொத்தான விளையாட்டுத் திறமையைக் குழிதோண்டிப் புதைத்துவிட்டு இயல்பு வாழ்க்கையில் கலந்து விடுகிறார்கள் விளையாட்டு வீரர்கள்.

குறைவான மக்கள் தொகை கொண்ட ஓர் ஏழை

நாடு ஜமைக்கா. மேலும், குற்றங்கள் மலிந்துகிடக்கும் அபாய நிலமது. எனினும், அங்குமட்டும் எப்படி உசைன் போல்ட், அசஃபா பவல், கேம்பல் பிரவுன், ஷெல்லி ஆன் ஃபிரேசர் போன்ற உலகத்தரமான வீரர்கள் உருவானார்கள்? தொடவே முடியாத தூரத்தில் இருந்த அமெரிக்காவை எப்படி ஓடஓட விரட்டினார்கள்?



ஜமைக்கா அரசுப் பள்ளிகளில் விளையாட்டு கட்டாயப் பாடம். வருடா வருடம் பள்ளிகளுக்கிடையே ஆண்டுவிழா விளையாட்டுப் போட்டி ஒன்று நடக்கும். ஐந்து முதல் பதினைந்து வயது வரை உள்ள மூவாயிரம் மாணவர்கள் திரளாகக் கலந்துகொள்வார்கள். முப்பதாயிரம் பார்வையாளர்கள் கூடும் அந்தப் போட்டியிலிருந்துதான் ஜமைக்காவுக்கான ஒலிம்பிக் வீரர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, அடுத்த கட்டப் பயிற்சிக்குத் தயார்ப்படுத்தப்படுவார்கள். அடிமைகளாகவே பல காலங்கள் வாழ்ந்ததால், இயல்பிலேயே போராட்டக் குணம் கொண்டவர்கள் ஜமைக்கா வீரர்கள். கோடீஸ்வரர் வீட்டு மகன்கள் என்று யாரும் அங்கு கிடையாது. சொந்த மகன் போல, தன் செல்வங்களைத் தானே கவனித்துக்கொள்கிறது ஜமைக்கா அரசு.

ஆனால், இன்னமும் மாற்றாந்தாய் மனப்பான்மையோடுதான் விளையாட்டு வீரர்களை நடத்திக்கொண்டிருக்கிறது இந்திய அரசு.

**ச.ந.கண்ணன்**



பள்ளிகளில் பி.டி. வகுப்புகளில் அவசர அவசரமாகப் பாடங்கள் நடத்துவதுதான் நம்முடைய பள்ளிகளின் இயல்பு. நிதியுதவி, தரமான பயிற்சி, பக்கபலம் என எல்லாவற்றுக்கும் கையேந்தும் நிலைமைதான் இங்கு நீடித்து வருகிறது. இதில், தனியார் விளையாட்டு நிறுவனங்களுக்கும், அரசு அமைப்புகளுக்கும் இடையே நீடிக்கும் 'நீயா? நானா?' போட்டி வேறு. தகவல் தொழில்நுட்பத்தில் பீடுநடைபோடும் இந்தியா, விளையாட்டில் வெகுவாகப் பின்தங்கியுள்ளது.

நடந்து முடிந்த ஒலிம்பிக்கில் மூன்று பதக்கங்கள் வென்றிருந்தும், இன்றுவரை அடுத்த ஒலிம்பிக்குக்கு இந்திய அணி எப்படித் தயாராகப்போகிறது என்கிற திட்டமும் மூன்று பதக்கங்களை முப்பதாக்கும் உத்திகளும் வகுக்கப்படவில்லை. ரட்சகன் யாராவது வந்து காப்பாற்றினால் ஒழிய, விளையாட்டுத் துறையில் பெரிய மாற்றங்கள் எதையும் எதிர்பார்க்க முடியாது. ●

# ம.ந.ராமசாமி

**ஷ**ண்முகப்ரியா சென்றுவிட்டாள். கணவன் செண்பகராமன் முன்பாகவே, தனக்கு வேண்டிய முக்கியப் பொருட்களை எடுத்துப் பெட்டியில் வைத்துக் கொண்டு, படியிறங்கிப் போய்விட்டாள்.

அவனும் 'போகாதே' என்று சொல்லவில்லை. சொல்லப்போனால் ஏதோ ஒருவகையில் சுதந்திரம் பெற்றதுபோல, கால்விலங்கு கழன்றது போல உணர்ந்தான்.

பெண்டாட்டி என்றால் இப்படியா? ஆதிக்க உரிமைதான் அன்பா?

கணவன் மனைவியிடையே ஒரு பிணைப்பு என்றால், கணவனுக்குப் பிடித்தது மனைவிக்குப் பிடித்ததாக இருக்க வேண்டும். அதேபோல அவளுக்குப் பிடிக்கிறது என்பதால் அது அவனுக்கும் பிடிக்க வேண்டும். காதல் என்பதன் முழுப் பொருள் அதுதான்.

ஷண்முகப்ரியா விலகியவளாக இருந்தாள். இயல்பாகவா அல்லது வேண்டுமென்றேவா என்றே புரிந்துகொள்ள முடியாத குழப்பமாய்.

''ஏங்க, முருங்கைக்காய் இருக்கு. வத்தக்குழம்பு வைக்கவா, சாம்பார் செய்யட்டுமா?''

''உனக்கு எது பிடிக்குமோ அதைப் பண்ணு...'' என்பான் அவன்.

''நீங்க சொல்லுங்க...''

''வத்தக்குழம்பே வை..''

''பருப்போட முருங்கை சேர்ந்தாலே... அந்த ருசியே தனிதாங்க.''

''சரி... இப்ப என்னாங்கறே? கேட்டே, சொன்னேன். சாம்பார் வைக்கிறதானா என்னைக் கேட்பானேன்?'' என்பான் எரிச்சலுடன்.

''நீங்க என்ன சொல்றீங்கன்னு தெரிஞ்சுக்கலாம்னிருந்தேன்...''

'அப்புறம் ஏறுக்குமாறாச் செய்யலாம்னு இருந்தியாக்கும்...' அவன் சொல்ல மாட்டான். பார்வையில் உணர்த்துவான்.

இதே போலத்தான் ஜவுளிக்கடையில். இரண்டு சேலைகளை எடுத்து வைத்துக் கொண்டு, 'எதை



வாங்கலாம்?' என்று கேட்பாள். 'உனக்குப் பிடித்ததை எடுத்துக் கொள்' என்பான். 'நீங்க சொல்லுங்க' என்பாள். ஏதோ அவன் விருப்பப்படி நடந்து கொள்கிறாற்போல. சொன்னால், மற்ற சேலைதான் வாங்குவாள்.

வெறுத்துப்போய்விடும் அவனுக்கு.



அன்றைய விவாதம் மிகப் பெரிதாக வளர்ந்துவிட்டது.

அவனிடம் ஸ்கூட்டர் இருந்தது. அவள் புதிய ஸ்கூட்டியில் வேலைக்குப் போய்வந்தாள். அவனது வாகனம் பழையது. மரைகள் எல்லாம் தேய்ந்து, ஹார்னுக்கு வேலையில்லாமல் இருந்தது. புதிதாய் மோட்டார் பைக் வாங்குவதாக அவளிடம் அவன் அறிவித்தான்.

''வேணாங்க'' என்றாள் தீர்மானத்துடன்.

''ஏன்? நடந்தே ஆபீஸ் போங்கறியா?''

''கார் வாங்கலாங்க...''

''காரா...?''

''ம்'' குரலில் பவ்யத்துக்குக் குறைச்சல் இல்லை.

''சரி, எங்க நிறுத்துவே அதை?''

# வல்வரவு

இருவருமே வேலைக்குப் போகிறார்கள். அவள் சம்பளத்தில் பிடித்தம் எதுவும் கிடையாது. அவனுக்கு அவசரக் கடனுதவி போன்ற பிடித்தங்கள் உண்டு. அவள் ஊதியம் அப்படியே மாதாமாதம் ரெகரிங் டெபாசிட் என்று வங்கியில். தான் அதிகம் சம்பாதிக்கிற ஆணவம், தைரியம். செண்பகராமன் கல்யாணத்துக்கு முன்பே இம்மாதிரி இக்கட்டுகளை எதிர்பார்த்திருந்தான். சற்று அவள் உரத்துப் பேசினாலும், தான் இணக்கமாய்ப் போவதே அறிவுடைமை என ஒரு நினைப்பிருந்தது அவனுள்.

''ஏன்... வீட்டு வாசல்லதான்...''

''இந்தத் தெருவே குறுகல். மனுஷங்க போகவர, மத்த வாகனங்கள் போக... எல்லாத்துக்குமே இடைஞ்சலா இருக்கும்.''

''அவங்களைப் பத்தி நாம ஏன் கவலைப்படணும்?''

இந்தக் கேள்வி செண்பகராமனுக்கு பண்பாடு தெரியாத அபத்தமாகப்பட்டது. ஏன் இத்தனை உக்கிரம்? 'கணவன்தானே, வளைத்துவிடுவேன்' என்ற இறுமாப்பு.

''கார் வாங்கணும்னா மூணு லட்சம் ஆகும். தர்றியா?'' என்றான் பொறுமையாய்.

''நான் ஏன் தரணும்? உங்க சேமிப்பு

## புன்னகைன்னா என்னா?

வானின் புன்னகை நிலவு
வயலின் புன்னகை கதிர்கள்
காற்றின் புன்னகை தென்றல்
கவியின் புன்னகை சொற்கள்
விளக்கின் புன்னகை வெளிச்சம்
வியர்வையின் புன்னகை வெற்றி

-லதா தமிழ்

லேர்ந்து எடுத்துக்கங்க.''

அதைச் சொல்ல இவ என்ன அண்ணாவி? அடக்கிக்கொண்டான். ''என்கிட்ட அவ்ளோ பணம் இல்லை.''

''பாங்க்ல கடன் வாங்கலாம். மாசா மாசம் அடைச்சிடலாம்.''

ஏறிட்டு எரித்துவிடுவது போலப் பார்த்தான். ''கார் வாங்கப்போறது இல்லை'' என்றான்.

''வாங்கணும்.''

''மாட்டேன். அப்படி வாங்கணும்னா பணம் கொடு.''

இதுதான் பிணக்கு. பிரிவுக்கான காரணம். ஜிலுஜிலுவென்று ஜொலிக்கும் மோட்டார் பைக்கை அவன் கொண்டு வந்து வீட்டுவாசலில் நிறுத்தியபோது அவள் பேசவில்லை. உள்ளே திட்டுவதற்கான வார்த்தைகளைக் கோர்த்து ஒத்திகை பார்த்துக்கொண்டிருக்கலாம். பெட்டியை எடுத்துக்கொண்டு படியிறங்கிச் சென்றுவிட்டாள். பட்டியிலிருந்து அறுத்துச்செல்லும் மாடு போல.

'அப்பாடா...' என்றிருந்தது அவனுக்கு.

'எங்க போகப் போறா, பிறந்த வீட்டுக்குத்தான். உள்ளூர்தான். தொலையட்டும்!'

இரண்டு நாட்கள் கழிந்தன. அடுத்த ஞாயிற்றுக்கிழமை. ஆட்களோடு மினி வேனைக் கூட்டி வந்தான். அநேகமாக வீடு நிறைய அவள் சாமான்களே இருந்தன. சீராக வந்தவை. அவளாகச் சேர்த்தவை. பாத்திரங்கள், பீரோ, கட்டில்கள், மெத்தைகள் - கட்டப்பட்டு வேனில் ஏற்றப்பட்டன. அடுத்த அரைமணியில், வேன் மாமனார் வீட்டு வாசலில் நின்றது.

உள்ளேயிருந்து மாமனார் பதறிக்கொண்டு வந்தார். ''என்ன மாப்ளே?'' என்றார்.

அவன் கண்காணிக்க, சாமான்கள் எல்லாம் மாமனார் வீட்டுக்குள் சென்றன. ஏதும் பேசாமல், காலி வேனில் ஏறி முன் இருக்கையில் அமர்ந்து திரும்பிவந்துவிட்டான்.

வீடு இவன் அப்பா கட்டியது. அப்பா அம்மா இருவருமே இல்லை இப்போது. இருந்திருந்தால் மட்டுமரியாதையில்லாமல் அவர்களை எப்படிச் சீரழித்திருப்பாளோ! தப்பினார்கள்...

ஒரு நல்ல நாளில் ராகுகாலத்துக்குப் பிறகு மாமனார் அவன் வீட்டுக்கு வந்தார். 'வாங்க' என அவன் கூப்பிடவில்லை. அலுப்பாய் இருந்தது.

''மாப்ளே, சடங்கு பண்ணணும். வந்திட்டுப் போங்க'' என்றார்.

''சடங்கா? என்ன சடங்கு?''

''என்ன மாப்ளே... தெரியாத மாதிரி

கேக்கறீங்க? மகளுக்கு வளைகாப்பு.''

''அப்படியா?'' என்றான் சிறு அதிர்ச்சியுடன். அவள் கிளம்பிப்போய் ஆறு மாதமாகிறது. ''இல்லீங்க மன்னிக்கணும்...'' என்றான்.

''என்ன மாப்ளே?''

''உங்க மகளைப் பத்தி உங்களுக்குத் தெரிஞ்சிருக்கணும்...''

''நல்லாத் தெரியும். அவளைப் போல என் பெண்டாட்டியும் என்னைவிட்டுப் போயிருந்தால், இப்ப உங்களுக்குப் பிரச்னையே இருந்திருக்காது.''

வியப்புடன் பெரியவரை அவன் பார்த்தான்.

''யோசிங்க மாப்ளே...'' என்றார்.

அவனிடம் புதிதாய் யோசிக்க எதுவும் இல்லை.

**நா**ட்கள் போய், மாதங்கள் உருண்டன. இரண்டு ஆண்டுகள் மாதங்களைத் தள்ளிச்சென்றன. லாரியில் வீட்டுச் சாமான்களோடு தன் குழந்தையுடன் வந்த ஷண்முகப்ரியா, கணவன் வீட்டுக் கதவில் பூட்டு தொங்கியது கண்டு திடுக்கிட்டாள்.

வலது வீடு கணவரின் நண்பர் ஆத்மநாதனுடையது. வாசல் திறந்திருந்தது. குழந்தையுடன் நடந்தாள். கதவின் கிரீச். மேல் துண்டை இழுத்துப் போர்த்தியபடி ஆத்மநாதன் வந்தார். ''என்னம்மா?'' என்றார்.

''வீடு பூட்டியிருக்கே.''

''ஆமா... உனக்குத் தெரியாதா?''

''என்ன?''

''செண்பகராமன் வேலைய ராஜினாமா பண்ணிட்டு, எங்கயோ வடக்கே ஆஸ்ரமத்துக்குப் போயிட்டான்.''

திடுக்கிட்டாள். கால்களில் திடீரென்று சக்தி வற்றிவிட்டாற்போலிருந்தது. ''எந்த ஆஸ்ரமம்?''

''தெரியலை. நானே கடிதம் போடறேன்னு சொல்லிட்டுப்போனான். நானும் கேட்டுக்கல. அவனாச் சொல்லாதப்ப தூண்டித் துருவிக் கேட்பானேன்னு விட்டுட்டேன். கதவைப் பூட்டி சாவியைக் கொடுத்துட்டு வாடகைக்கு யாராச்சும் வந்தால் குடுங்கன்னான்.''

அவள் சுற்றுமுற்றும் பார்த்தாள். தெருவில் அனேக வாசல்கள் நிறைந்திருந்தன. ''உங்க வீட்ல உன் குழந்தை விளையாடுது'ன்னு அவரு லெட்டர் போட்டா சொல்லுங்க. இப்போ என் வீட்டு சாவியைத் தர்றீங்களா?'' என்று கேட்டாள் ஷண்முகப்ரியா.

''பேஷா!'' என்றபடி சாவி எடுக்க உள்ளே போனார் ஆத்மநாதன்.

வாசலில் பொருட்களோடு வந்த லாரிக்குப் பின்னால், அவள் வாங்கிய புத்தம் புதிய கார் நின்றுகொண்டிருந்தது. ●



''நம்ம மன்னர் படையைக் கலைக்கப் போறாரா?''

''யார் எதிர்த்து வந்தாலும் சரணாகதி அடையுறதுன்னு முடிவெடுத்தபிறகு வீணாகப் படை எதுக்குங்கிறாரு!''

- செவல்குளம் 'ஆச்சா'

# ஜாலி ஸ்டோர்ஸ்

*(ரஜினிகாந்தின் ராகவேந்திரா மண்டபத்தில், கட்சி ஆரம்பிக்கப் போவது பற்றி பாலச்சந்தர், ஷங்கர், கமல் மற்றும் சில ரசிகர்களுடன் ஆலோசனை செய்துகொண்டிருக்கிறார் சூப்பர் ஸ்டார்.)*

**பாலச்சந்தர் :** என்னப்பா... வழக்கமா நீ சொல்ற மாதிரி... இதுவும் 'கப்ஸா' தானே...

**ரஜினி :** இல்ல சார்... மக்கள் கரண்ட் இல்லாம கஷ்டப் படறதைப் பார்த்து நேத்து காலைல மூணு மணிக்குக் கண் கலங்கிட்டேன்.

**ஷங்கர் :** (கவலையுடன்) சார்... 'எந்திரம்' ஷூட்டிங் போற நேரத்துல இப்படி ஆரம்பிச்சீங்கன்னா படப்பிடிப்பு பாதிக்காதா?

**ரஜினி :** அப்படின்னா... நீங்க படம் எடுத்து முடிக்கிற மூணு வருஷம் எதுவும் செய்யக்கூடாதா?

**கமல் :** வேணும்னா... ரஜினி மாதிரி கெட்டப்பை மாத்தி நான் நடிக்கட்டுமா?

**பாலச்சந்தர் :** (மனசுக்குள்) முதல்ல இவருகிட்ட இருக்கிற மேக்-அப் 'கிட்'டைத் தூக்கி எறியணும்.

**ரஜினி :** ப்ளீஸ்... சொல்லுங்க.. நான் ஆட்சிக்கு வந்தா என்னென்ன செய்யலாம்னு ஒரு லிஸ்ட் கொடுங்க. ஷூட்டிங் வேடிக்கை பார்க்க வர்ற ஆடியன்ஸ் கிட்ட வோட்டு கேட்க வசதியா இருக்கும். முதல்ல கட்சிக்குப் பேர் வைக்கணும்.

**கமல் :** ம.க.வா.க. இது நல்லா இருக்கில்ல.. நான்

வாரி வழங்கும் வாஸ்கோடகாமா

குழந்தை அணித் தலைவன் அவன்தான்

50 பைசாவுக்கு அரிசி

நான் ரிஷிகேஷ் போறேன்

தான் சொன்னேன் (என்று எழுந்து விசிலடிக்கிறார்) டைட்டில்ல.. ஸாரி கொடியில எம்பேரைப் போட்டுருங்க...

**ஷங்கர்** : (குழப்பத்துடன்) ம.க.வா.க.ன்னா?

**கமல்** : மக்களைக் கஷ்டப்படாமல் வாழவைக்கும் கழகம்.

**ரசிகர்** : தலைவா... ரொம்ப நீளமா இருக்கு... 'ஷார்ட்டா' வைங்க... அப்புறம்... ஆட்சிக்கு வந்தா என்ன செய்வீங்க... அதை முதல்ல... சொல்லுங்க.

**ரஜினி** : ம்... மக்களை சந்தோஷமா வெச்சிருக்க... மாவட்டந்தோறும் மாசத்துக்கு ஒருதரம் 'மானாட மயிலாட' நடத்துவேன்... அதுல நமீதாவும் ஆடுவாங்க.

**ஷங்கர்** : அப்படியே... அம்பது பைசாவுக்கு அரிசியும், முப்பது பைசாவுக்கு பருப்பும் போட்டுடுங்க.

ஸ்கூல் பிள்ளைகளுக்கு கம்மர் கட்டு, கடலை பர்பி வாங்க காசு கொடுப்போம்.

**கமல்** : அதெல்லாம் இருக்கட்டும்... முதல்ல சினிமாவுக்கு என்ன செய்யப் போறீங்க...?

**ரஜினி** : தண்ணி அடிக்கிற மாதிரி சிகரெட் பிடிக்கிற மாதிரி காட்சி வைக்கக் கூடாதுன்னு சொல்றவங்களை ஜெயில்ல போடுவோம். தமிழ்நாட்டுல எங்க வேணா ஓம் ஷூட்டிங் இலவசமா எடுக்கலாம்.

**ரசிகர்** : அப்புறம்... தலைவரே... அரசியல் தலைவருங்க அவங்களாவே பட்டப் பெயர் வெச்சிருக்கிற மாதிரி... உங்களுக்கும் ஒரு பெயர் வேணும்.

**ரஜினி** : வாரி வழங்கும் வாஸ்கோடகாமா. நல்லா இருக்கா? இப்படியே போஸ்டர் அடிங்க...

# 50 பைசா அரிசி!

**கமல்** : பால் பாக்கெட் மாதிரி... பெட்ரோல் பாக்கெட் போடுவோம்னு சொல்லுங்க... முடியுமா.. முடியாதான்னு வோட்டு வாங்கிட்டு முடிவு பண்ணிக்குவோம்.

**ரசிகர்** : தலைவா... உங்க ரசிகர்களுக்கு என்ன செய்வீங்க...?

**ரஜினி** : எல்லா தியேட்டர்லயும் சினிமா இலவசம்... டாஸ்மாக்குல ஒரு கட்டிங் இலவசம்... சரக்கு ஓவராகி... பிளாகிட்டா அவங்கவங்க வீட்ல கொண்டு விட 'டாஸ்மார்க்கர்' படை அமைப்பேன்.

**பாலச்சந்தர்** : பாண்டி முதல்வர்... காலேஜ் பையன்களுக்கு கைச்செலவுக்கு பணம் தர்றாரு... அது மாதிரி ஏதாவது செய்யணும்.

**ரஜினி** : நாம...

**உத்தமபுத்திரன்**

(அப்போது லதா ரஜினியிடமிருந்து ஃபோன் வருகிறது)

**லதா** : என்னங்க... கட்சி ஆரம்பிக்கப் போறீங்களே... நம்ம பேரன் யாத்ராவுக்கு என்ன பதவி?

**ரஜினி** : இளைஞர் அணித் தலைவனே அவன்தானே... எதிர்ப்பு வந்தா குழந்தை அணித் தலைவனாக்கிடறேன்.

**ஐஸ்வர்யா** : (ஃபோனில்) அப்பா... அப்ப எனக்கு...?

**ரஜினி** : இந்த தெருக்கூத்து... தெம்மாங்கு... குத்தாட்டம்... கவிதை.. கட்டுரை... இதுக்கெல்லாம் வாரியம் அமைச்சு உன்னை ஃபேமஸ் ஆக்கிடறேன்.

**ஐஸ்** : அப்போ அவருக்கு...? நீங்க

ஆரம்பிக்கப்போற ஆட்சி பிஸினஸ்ல தனுஷையும் பார்ட்னரா சேத்துக்கங்க... அவர் பேர்ல... செங்கல்பட்டு, காஞ்சிபுரம்... திருச்சி... திருநெல்வேலி... மாயவரத்தை மட்டும் எழுதி வெச்சிடுங்க..

**கமல் :** அப்புறம்... எங்க போனாலும், லதாவையும் கூடவே கூட்டிட்டுப் போங்க... போஸ்டர்ல போடுங்க. கட்-அவுட் வைங்க. விஜயகாந்த் மாதிரி... அவரோட ஜோசியர் சொல்லியிருக்கார். முதல்வராகிற யோகம் பிரேமலதாவுக்குத் தான் இருக்காம். கேப்டனுக்கு இல்லையாம்.

**ஷங்கர் :** முக்கியமா சொந்தமா சேனல் வேணும். திட்டித் திட்டி கவிதை எழுதணும். நிமிஷத்துக்கு நிமிஷம்... அறிக்கை விடணும்.. கிழவிகளைக் கட்டிப்பிடிச்சி கண்ணீர் விடற மாதிரி நடிக்கணும்.

**ரசிகர் :** நம்ம ஆளுங்களை விட்டே தலைவர் சிலைகளை உடைச்சிட்டு கண்டன அறிக்கை விடணும். குறிப்பா 'பல்டி' அடிக்கத் தெரியணும். அதுலதான் நீங்க இல்லாடியாச்சே...

**ரஜினி :** அடேங்கப்பா... எவ்வளவு விஷயம் இருக்கு... முதல்ல எனக்கு ஓய்வு தேவை. இமயமலைக்குப் போறேன்... ஆறு மாசம் கழிச்சு பேசுவோம்... ஸாரி... இமயமலைன்னு தெரியாம சொல்லிட்டேன்... 'எந்திரம்' ஷூட்டிங்... இல்லை யில்லை... பேரனுக்கு மொட்டை போட திருப்பதிக்கு... அச்சச்சோ... அங்கேயும் இல்ல... ரிஷிகேஷ் போகத்தான் முடிவு செஞ்சேன்... (என்று கிளம்ப...)

**பாலசந்தர் :** ஏம்பா... கமல், ஷங்கர்... இவரு சொன்னது ஏதாவது புரிஞ்சதா?

**கமல் :** ஒண்ணும் புரியலை... 'மர்ம யோகி' ஷூட்டிங் போயிருந்தாலும் ஒரு ஸீனாவது எடுத்திருப்பேன்.

*('என் பொழப்பும் போச்சு... உன் பொழப்பும் போச்சு' என்று தலையில் கைவைத்தபடி மூவரும் உட்கார்ந்து கொண்டிருக்கின்றனர்.)*








# சிரி...சிந்தி!

கிரடிட் கார்டினால் விரும்பிக் கடனாளியாகும் நடுத்தரக் குடும்பத்தினரின் நிலையைச் சொல்லும் 'பிளாஸ்டிக் கடவுள்', வாஸ்து சாஸ்திரத்தின் நம்பிக்கையைக் கேள்வி கேட்கும் 'வாஸ்து வாசு' போன்ற நகைச்சுவையோடு சமூகப் பிரச்னைகளையும் பேசும் நாடகங்களுக்குச் சொந்தக்காரர் - யுனைடெட் விஷுவல் டி.வி. வரதராஜன்.

இவருடைய பதிமூன்றாவது நாடகம் 'ரீல் எஸ்டேட்'. மக்கள் மத்தியில் எல்லோர் கவனத்தையும் வரவேற்பையும் பெற்றுவரும் இந்நாடகம், வாடகை வீட்டுக்காரன் சொந்த வீட்டுக்காரனாக மாறுவதில் ஏற்படும் சிக்கல்களை, அறியாமைகளைச் சிரிப்போடு அலசுகிறது. தாஜ்மஹாலுக்கு இணையாக வீடுகட்டத் துவங்கி, தாழ்வாரத்தைக்கூடத் தாண்டமுடியாத சாமானியனின் தவிப்பையும், பின்னர் கனவு மெய்ப்படுவதில் அடையும் சந்தோஷச் சங்கொலியையும் 'வேதம் புதிது' கண்ணன் எழுதியுள்ளார்.

''சிரிப்பு நாடகத்தினூடே மெஸேஜ் அவசியமா? யதார்த்த நாடகத்தில் மட்டும் ஏன் சஞ்சரிக்கிறீர்கள்?'' என்று கேட்டால் ''நடுத்தர வர்க்கக் கூட்டத்திலேயே நிறைய கதைக் களஞ்சியங்கள் இருக்கும்போது, யதார்த்தத்தை மீறி கற்பனைக்கு ஏன் தாவவேண்டும்? நகைச்சுவையில் துவங்கினாலும் அவரவர் வாழ்க்கைச் சம்பவமே காட்சியாய் மாறிவிடுவதால் நாடகத்தில் ஒன்றிவிட முடியும். அதைவிட எங்கள் மையக் கருத்து வெளிப்படையாகவோ மறைமுகமாகவோ உங்கள் முன் வைக்கப்படுகையில், அதை ஏற்கவோ மறுக்கவோ ஏதேனும் ஒரு வகையில் விமர்சிக்கவோ உங்களை வேண்டுகிறோம். நாடகம் பொழுதைப் போக்க மட்டுமல்ல பயனுள்ள பொழுதாக ஆக்கவும்தான்'' என்கிறார் டி.வி.வரதராஜன்.

சிரிக்கவும் சிந்திக்கவும் வைக்கும் இதுபோன்ற நாடகப்புறப்பாடு, நாடகத் தமிழுக்கு அவசியம்தான்.



நாடகப் புன்னகை

– அமிர்தா

என்னை இயக்கிய ஹீரோக்கள்-8

# பாச மலர்களும்... தக்காளி தோசையும்!

**நா**ன் ஆனந்தா நர்ஸரி ஸ்கூலில் படித்தேன். நான் படித்த அதே நர்ஸரியில் தான், என் தங்கை தேவியைச் சேர்த்தார்கள். அப்போது நான் ஆறாவதோ ஏழாவதோ படித்துக்கொண்டிருந்தேன். ஸ்கூல் முடிந்ததும் தங்கையைக் கூட்டிவர நான் போவேன். என்னா பெரிய...? நான் படிச்சு முடிச்ச அதே நர்ஸரிதானே... என்கிற தெனாவெட்டில் வாசலில் காத்திருப்பேன். தங்கை வந்ததும் பையை நான் வாங்கிக் கொண்டு, அவளைக் கூட்டி வருவேன். வீட்டில் ஓரமாய் வரச்சொன்னார்கள் என்பதால், சுவரை உரசிக்கொண்டு எல்லார் வீட்டு வாசல் படிகளிலும் ஏறி ஏறி வருவோம்.

நர்ஸரியை ஒட்டியிருக்கும் உஷா மருத்துவமனையில் பெரிய வேப்ப மரம் இருக்கும். அதிலிருந்து நிறைய வேப்பம் பழங்கள் உதிர்ந்து கிடக்கும். அதை 'தாத்தா பழம்' என்போம். அதன் அடிமுனையை ஓங்கி அழுத்தினால், கொட்டை உயரத்துக்குப் பறந்துபோகும். அந்த வயதிலும், அந்த கேனத்தனமான விளையாட்டில் எனக்கு விருப்பம். நான் தங்கையிடம், 'பழம் பொறுக்கலாம்' எனச் சொல்லி உள்ளே கூட்டிப் போனேன். இருவரும் ஆர்வமாக பொறுக்க ஆரம்பித்தோம். நான் சந்

துக்குள் எல்லாம் போய் நிறைய பொறுக்கினேன். கொஞ்ச நேரத்தில் திரும்பிப்பார்த்தால் தங்கையைக் காணோம். பதறிப்போனேன்! வெளியில் வந்து பார்த்தால் ரோட்டிலும் காணோம். தானே வீட்டுக்குப் போய்விட்டாள் போல என நினைத்து தேடிக்கொண்டே ஓடோடி வீட்டுக்கு வந்தேன். ''தேவி வந்துருச்சுல்ல?'' என்றேன். அவர்கள் குழப்பமும், பதற்றமுமாக ''எங்கடா வந்துச்சு? நீதானடா கூப்பிடப் போன?'' என கத்த, நான் கால் பிடரியில்பட மறுபடி வேப்பமர ஹாஸ்பிட்டலுக்கு ஓட - அங்கு அழுதபடி தங்கை நின்றிருந்தாள். ''அதுக்குள்ள என்னைத் தனியா விட்டுட்டு எங்க போயிட்ட?' என்றவளைச் சமாதானப்படுத்தி கூட்டி வந்தேன். அதற்குள் பாதி வழியிலேயே வீட்டிலிருந்த மற்றவர்களும் பதற்றமாய் ஓடிவந்துகொண்டிருக்க... மீதி வழியெங்கும் எனக்கு அர்ச்சனைகளும், அடிகளும் தான்!

**வீ**ட்டில் ஒரே பெண் குழந்தை என்பதால் அவளுக்கு நிறைய செல்லம். நான் மட்டும்தான் மிரட்டிப் பார்ப்பேன். என் அண்ணன் என்னை மிரட்டும் அளவுக்கு, என் மிரட்டல் அவளிடம் செல்லுபடியாகாது. முடிந்த அளவு முயற்சிப்பேன். வீட்டில் மற்றவர்கள் இல்லாத நாளில் - கரன்ட் போனபோது, அவளுக்கு வேதாளம் கதை சொல்லி பயமுறுத்தி, கதறி அழ வைத்தேன். எல்லோரும் திரும்பி வர, என் தங்கையின் முறையீட்டுக்கு மறு விசாரிப்பே இல்லாமல் என்னை டின் கட்டினார்கள்... பதிலுக்கு நான் கதறினேன். பாத்ரூமில் அவளுக்கு வைக்கும் சுடு தண்ணீரில் நான் குளித்துவிட்டு வந்துவிடுவேன். அவசரத்தில் அவள் குளிக்காமல் போவாள். நான் பரீட்சை நேரத்தில் சீக்கிரம் எழுந்தால் அவளிடம், 'இன்னும் ஏன் தூங்குற?', 'அப்புறம் எப்படி நல்ல மார்க் எடுப்ப?', 'நீ உருப்பட்ட மாதிரிதான்' எனக் கூறி அவளையும் தூங்கவிடாமல் நச்சரிப்பேன்.

நான் சைக்கிள் பழகின புதிது. என் சோதனை ஓட்டத்துக்கு அவள்தான் எலி. சைக்கிளில் அவளை ஸ்கூலுக்கு நான் கூட்டிப்போய் விடுகிறேன் என்பேன். அவள் வரவே மாட்டேன் என்பாள். வேறு யாரும் இல்லாவிட்டால் என்னதான் செய்யமுடியும்? 'விதியே' என கடைசியில் என்னுடன் தான் வருவாள். குத்துமதிப்பாக அவளைப் பின்னால் வைத்து கேப்ரன் ஹால் ஸ்கூலுக்கு ஓட்டிப்போவேன். ஒரு பீதியோடே உட்கார்ந்திருப்பாள். சைக்கிளே எதிர்பார்க்காத ஒரு தருணத்தில்... ரோட்டோரம், அவளோடு தலைகுப்புற விழுவேன்! பை, டிஃபன்பாக்ஸ் எல்லாம் சிதறிவிடும். விழுந்தவுடன் நான் முந்திக்கொண்டு, 'பின்னால ஆடாம உட்காரமாட்டியா?' என்பேன். 'உனக்கு ஓட்டத் தெரியாட்டி நான் ஆட்டுறேனா? முதல்ல நல்லா சைக்கிள் பழகு'' என்பாள். நான் 'நீ படிக்கிற லட்சணத்துக்கு இவ்வளவு ஓட்டினால் போதும்' என்பேன்.

**எ**ன்னைப் போல் இல்லாமல் தேவி நன்கு படிப்பாள். நல்ல கலை ரசனை உள்ளவள். நான் படம் வரைகிற காலங்களில், ரசித்து கமென்ட் சொல்லுவாள். ஷார்ப்பாகச் சொல்லுவாள். இன்று 'புலிகேசி', 'கடவுள்' வரை அவள் கமென்ட் தனித்துவமாக இருக்கும். எனது ரசிகர் குழுவில் அவள் மிக முக்கியமானவள். 'மதுரை கல்லூரியில்' அவளுக்கு MFC சீட் வாங்க, அப்ளிகேஷன், இன்டர்வியூ என நான்

**இயக்குநர் சிம்புதேவன்**

கூடவே இருந்தேன். சந்தோஷமாக இருந்தது. ''நல்லா படிச்சு கோல்டு மெடல் வாங்கணும்'' என்றேன்.

''கோல்டு மெடல் வாங்கறதுன்னா நான் முதல்லயே டாக்டராகி இருக்க மாட்டேனா?'' என்றாள் சிரித்தபடி. நல்ல சென்ஸ் ஆஃப் ஹ்யூமர் உடையவள். இப்போது இசைக் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கிறாள்.

ஒருமுறை அண்ணனுக்கு பெண் பார்க்கக் கேட்டு வந்த புரோக்கர், 'இந்த வீட்ல கவர்மென்ட் மாப்பிள்ளை இருக்காருன்னு சொன்னாங்க' என விசாரிக்க, பதிலுக்கு அவள் 'இந்த வீட்ல இருக்கிற ஒரே கவர்மெண்ட் மாப்பிள்ளை எங்க அப்பாதான்! அவருக்கும் கல்யாணம் ஆயிடுச்சே!' எனச் சொல்ல, புரோக்கர் சிதறி ஓடியிருக்கிறார்.

நான் பார்த்து நர்ஸரி போனவள் இன்று பிரமாதமாக எழுதுகிறாள். நன்கு சமைக்கிறாள். நான் ஊருக்குப் போகும்போதெல்லாம் சமைத்துக் கொடுப்பாள். குறிப்பாக தக்காளி தோசை! நான் உதவி இயக்குனராகக் கஷ்டப்பட்ட காலத்தில், அவள் சேர்த்து வைத்திருக்கும் கொஞ்சநஞ்ச பணத்தை அப்பா அம்மாவுக்கு தெரியாமல் தந்து உதவுவாள். ஒரு நெகிழ்வான உறவு. அவள் என் மரியாதைக்குரிய தோழி!




இன்னொரு பாசமலர் என் சித்தி பெண் வசுமதி. தேவியைவிட ஒரு வயது மூத்தவள். குழந்தையாக இருக்கும் ஃபோட்டோவிலேயே அழுதபடி சிரிப்பாள். குழந்தையில் அவள் அழாமல் இருக்க, நான்தான் தூக்கி வைத்திருப்பேன். நல்ல வெயிட்! கையெல்லாம் வலிக்கும். ஒட்டன்சத்திரத்தில் மெட்ரிக்குலேஷனில் படித்தாள். இவளும் மிக நன்றாக படிப்பவள். என்ன... ஆங்கில மீடியத்திலேயே படித்து, தமிழ் வாசிக்க வராமல் விகடன், கல்கி எல்லாவற்றையும் படம்தான் பார்ப்பாள். இத்தனைக்கும் சித்தப்பா தமிழ் வாத்தியார்.

எனது படைப்புகள் பற்றி நுட்பமாக விமர்சனம் தருவாள். படைப்புகள் பற்றிய மற்றவர்களின் கருத்துகளையும் சொல்வாள்.

நான் சித்தி வீட்டுக்குப் போனால், உடனே இவள் பச்சை மொச்சை பொரியல் பண்ணுவாள். அதுதான் உச்சகட்ட ருசி! இவளும் தோசை ஸ்பெஷலிஸ்ட். ஒரு முறை ஃபோன் செய்து, 'திருச்சியில் மாஸ்டர் டிகிரி கம்ப்யூட்டர் சயின்ஸ் சேரப் போறேன்' என்றாள். எனக்கு அதிர்ச்சியும், சந்தோஷமும். என் குடும்பத்தில் என்னைத்

தவிர, பசங்கள் எல்லோருமே மாஸ்டர் டிகிரிதான்.

வசுவும் அவள் தோழிகள் நாலு பேரும் வேலை தேடி, மஞ்சள் பை சகிதமாய் பேந்த பேந்த முழித்தபடி சென்னை வந்தார்கள். உதவி இயக்குனராக இருந்த நான்தான் அவர்களுக்கு காட்ஃபாதர்! அவர்களை ஒரு ஹாஸ்டலில் தங்கவைத்தேன். மருண்டு போய் இருப்பார்கள். சென்னைக்குள் மெல்ல வேலை தேட ஆரம்பித்தார்கள். ஜெயில் கைதிகளைப் பார்க்கப்போவதுபோல் நான் அடிக்கடி கடலை மிட்டாய், முறுக்கு பாக்கெட்டுகளோடு போய் அவர்களைப் பார்ப்பேன். என்னிடம் மட்டும்தான் செல்ஃபோன் இருக்கும். ஜுஸ் கடைக்கு அவர்களை வம்படியாக கூட்டிப்போய், லெமன் ஜுஸ் வாங்கிக் கொடுத்து 'அண்ணன்' என்கிற மகத்துவத்தைப் புரியவைப்பேன்.



✱ பாசமலர்களுடன்...

ஆறு மாதம் ஆகியிருக்கும். மெல்ல அவர்களுக்கு சாஃப்ட்வேர் இன்ஜினியர் வேலை கிடைக்க ஆரம்பித்தது. ஒருநாள் ஜுஸ் கடையில் நான் லெமன் ஜுஸ் குடித்துக்கொண்டிருந்தபோது தற்செயலாகப் பார்க்க, அவர்கள் எல்லோரும்... கையில் மாதுளை ஜீஸோடு! அவர்களும் பார்த்துவிட, 'என்னண்ணா எப்படியிருக்கீங்க? நீங்களும் மாதுளை சாப்டுறீங்களா? ஸ்பென்சர் வர்றீங்களா?' என்றனர். நான் 'வேண்டாம்' என்றேன். அவர்கள் கைகளில் கலர் கலர் செல்ஃபோன்கள். எனது செங்கல் மாடல் நோக்கியாவை மரியாதை நிமித்தமாகப் பாக்கெட்டுக்குள் வைத்துவிட்டேன். அதன்பின் அவர்கள் எங்கேயோ... போய்விட்டார்கள். இன்று ஆளுக்கொரு நாட்டில் சாஃப்ட்வேர் இன்ஜினியர்களாக இருக்கிறார்கள். இதைத்தான் 'அறை எண் 305-ல் கடவுள்' படத்தில் ஜாவா சுந்தரேசன் என்ற கேரக்டராக வைத்திருந்தேன். வசுமதி இப்போது லோகநாதனைத் திருமணம் செய்துகொண்டு தீபன் என்ற குழந்தையோடு இருக்கிறாள். அவரும் சாஃப்ட்வேர் இன்ஜினியர்தான்.



ஒருவனின் முன்னேற்றத்துக்கு உடன் பிறந்தவர்கள் உதவி செய்துதான் பங்களிக்க வேண்டும் என்று இல்லை. அவர்கள்தான் ஆப்போசிட் ரியாக்ஷன்! சுவர் இல்லாமல் பந்து திரும்பி வராது. ஓசை வரவைக்கும் இன்னொரு கை இவர்கள். பெருமைக்குரிய சகோதரிகள். என் தோளருகே இவர்கள் நிற்கிற நம்பிக்கையும், பலமும் போதும்... மகிழ்வோடு நான் என் பணியைத் துரிதப்படுத்த.

*(பேசுவேன்)*

வங்கிகள் நிதிப் பற்றாக்குறையால் தடுமாறுவதும், அப்படிப்பட்ட சூழ்நிலையில் அவற்றை வேறு வங்கிகளோடு இணைப்பதும் நாம் கேள்விப்பட்ட விஷ



* சீதாராமன்

உள்ள அங்காடிகளில் பிலிப்பைன்ஸ் இளம்பெண்கள், மருத்துவமனைகளில் கேரள இளம் பெண்கள், பல்வகைத் தொழிலாளர்களாக இலங்கைத் தமிழர்கள் ஆகியோர் வேலை பார்க்கின்றனர்.

# தோஹா வங்கிக்குத் தோள் கொடுத்த தமிழர்!

யங்கள்தான். அப்படியொரு சூழலில் இருந்த தோஹா வங்கியை, அந்தச் சரிவில் இருந்து மீட்டிருக்கிறார் ஒரு தமிழர். மயிலாடுதுறையைச் சேர்ந்த அவர் சீதாராமன்!

எங்கே இருக்கிறது இந்த தோஹா வங்கி? மத்திய கிழக்கு நாடுகளில் ஒன்று கத்தார். அது ஆங்கிலேய ஆதிக்கத்திலிருந்து விடுபட்ட ஆண்டு 1971. தற்போது அங்கு மன்னராட்சி நடக்கிறது.

இயற்கை வாயு, எண்ணெய் வளம் மிக்க நாடு. அதனாலேயே இங்கு வாழ்பவர்களின் பொருளாதார வளர்ச்சி அபரிமிதமாக உள்ளது.

பேரீச்சம்பழம் நன்கு விளைகிறது. இப்போதுதான் அத்தி பூத்தாற்போல அங்கொன்றும் இங்கொன்றுமாக கத்திரி, வெண்டை பயிரிடப்பட்டு வருகின்றன.

கத்தார் நாட்டின் மொத்த மக்கள் தொகை சுமார் எட்டு லட்சம். இதில் தலைநகர் தோஹாவில் மொத்த மக்கள் தொகை சுமார் மூன்று லட்சம். இங்கு

கத்தார் நாட்டின் மிகப் பெரிய வங்கி, தோஹா வங்கி. 1978ல் துவங்கப்பட்டது. 1979ல் சர்வதேச வங்கிகளுடன் வணிகத் தொடர்பினை ஏற்படுத்திக்கொண்டது.

ஏழெட்டு ஆண்டுகளுக்கு முன், வங்கியின் நிதிநிலை சரியத்தொடங்கியது. இன்னும் சில வருடங்கள் இதே நிலை நீடித்தால், வங்கிப் பணிகள் முடங்கிப் போய்விடுமோ என எண்ணுகின்ற அளவுக்கு சரிவு தொடர்ந்துகொண்டேயிருந்தது.

இந்நிலையில் 2002ல் தோஹா வங்கியின் (பொறுப்பு) மேலாளராகப் பணியேற்றார் சீதாராமன். இவர், வங்கியின் நிதிநிலையினையும், வளர்ச்சியினையும் பிரமிக்கத்தக்க அளவில் உயர்த்திக் காட்டியிருக்கிறார்.

விளைவு? குவைத் போன்ற நாடுகளில் தோஹா வங்கி தற்போது இயங்கி வருகிறது. இந்தியா, சிங்கப்பூர், ஜப்பான், துருக்கி, சீனா, ருமேனியா போன்ற நாடுகளில் வங்கியின் பிரதிநிதித்துவ அலு



வலகங்கள் துவங்கப்பட்டு செயல்பட்டு வருகின்றன.

தவிர, கடந்த நான்கைந்து ஆண்டுகளில் மத்திய கிழக்கு நாடுகளில் 'மிகச் சிறந்த வங்கி' எனப் பல விருதுகளை இவ்வங்கி பெற்றுள்ளது. 'இதற்கு முழுக் காரணம், சீதாராமன் மட்டுமே' எனக் கூறுகின்றனர் வங்கியின் பணியாளர்கள்.

''தனி மனித சாதனை என்று இதனைக் கூறக்கூடாது. பணியாளர்கள் அனைவரின் ஒத்துழைப்பு, வாடிக்கையாளர்கள் வைத்துள்ள நம்பிக்கை போன்றவைகளே முக்கியக் காரணங்கள்!'' என்கிறார், தற்போது




...மௌனம் பூசிய பார்வையினாலோ,
கோபம் தெறிக்கும் வார்த்தைகளோடோ,
பொருள் தொலைந்த வெளியிலோ,
சமாதானம் வேண்டியோ,
சச்சரவு தொடர்ந்தோ
உரையாடலை யாரோ ஒருவர்
முன்னின்று துவங்க வேண்டியுள்ளது.
புன்னகைக்காமல் துவங்கும்
எந்த உரையாடலையும்
சவ ஊர்வலம்
என்றே சொல்லவேண்டும்.

**- கவிஞர் அ.வெண்ணிலா**

✱ தோஹா வங்கி



தோஹா வங்கியின் தலைமை நிர்வாக அதிகாரியாக விளங்கும் சீதாராமன்!

அவர் பிறந்த ஊர் மயிலாடுதுறை. தஞ்சை கல்யாண சுந்தரம் மேனிலைப் பள்ளி மாணவர். திருச்சி தேசியக் கல்லூரியில் பி.காம். பட்டப் படிப்பில் கோல்டு மெடலிஸ்ட். தந்தை சமஸ்கிருத பண்டிதர், ஆசிரியர். ' 'வெற்றிகள் உன் கண்களை மறைக்கக் கூடாது. கடந்து வந்த பாதைகளை நீ மறக்கக்கூடாது' என்பார் என் தந்தை! நான் பின்பற்றும் நெறி அதுதான்!' பளிச் சென்று வெற்றி ரகசியம் கூறுகிறார் சீதாராமன்.

தொகுப்பு : **புதியவன்**

# தராசு

● என்.காளிதாஸ், சிதம்பரம்

**? அணுசக்தி தயாரிப்பில் என்.எஸ்.ஜி. நாடுகளின் சந்தேகம் தீரவில்லையே?**

! சந்தேகங்கள் தீராது போனாலும் அமெரிக்க வல்லரசின் நிர்ப்பந்தத்துக்குப் பணிந்து, பச்சைக்கொடி காட்டிவிட்டது என்.எஸ்.ஜி. அமைப்பு. அதாவது, அணு உலை தொடர்பான பொருள்களை, பிற நாடுகள் இந்தியாவுக்கு சப்ளை செய்வதற்கு விதிக்கப்பட்டிருந்த தடை நீக்கப்பட்டுள்ளது. ஆயினும் இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்வதென்பது, அந்தந்த நாடுகளின் தனி உரிமையே; வற்புறுத்த முடியாது என்பதை ஆஸ்திரேலியா திட்டவட்டமாக உணர்த்தியுள்ளது.

● எஸ். பக்கிரிசாமி, திருவாரூர் ★

**? ஆந்திராவில் புதிதாகத் தோன்றியுள்ள பிரஜா ராஜ்ஜியம் கட்சியுடன் கூட்டணி வைத்துக்கொள்ள அரசியல் கட்சிகள் துடிக்கின்றனவே?**

! ஆமாமாம்! பிரபலமான ஒருவர் நல்ல நோக்கத்துடன் கட்சி ஆரம்பித்து, மக்கள் ஆதரவையும் பெற்றுவிட்டால் ஆபத்தாச்சே! விட்டுவிடுவோமா என்ன! கூட்டணி அமைச்சு குட்டிச்சுவராக்கினால்தானே நாங்க அரசியல் வியாபாரத்தைத் தொடர்ந்து லாபகரமாய் நடத்தமுடியும்!

● க.முத்துக்குமார், வி.புதூர்

**? ஒரு நல்ல எழுத்தாளருக்கு அழகு எது?**

! நேர்மை - வாழ்விலும் எழுத்திலும்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை

**? முறையான தகுதிகள் இருந்தாலும், சசிகலா கூட்டத்தினர் தயவின்றி அ.தி.மு.க.வில் எந்தப் பொறுப்பும் பதவியும் கிடைக்காது என்கிறாரே செல்வகணபதி?**

! முன்பு பதவி சுகம் அனுபவித்தபோது அந்த தயவு இவருக்கு விரும்பி ஏற்கத் தக்கதாகத்தானே இருந்தது. இப்போது குறை கூறுவானேன்?

# இலவச அரிசி



★ கோப்பளிக்கும் கோபம்!

● பி.ஜெயபிரகாஷ் சர்க்கார்பதி

**? மின்துறை அமைச்சர் ஆற்காடு வீராசாமியை 'இருளப்பன்' என்றும், நிதியமைச்சர் ப.சிதம்பரத்தை 'ஆண்டியப்பன்' என்றும் பெயர் மாற்றிக்கொள்ளும்படி இல.கணேசன் கூறியது...?**

! நையாண்டி நன்றாகத்தான் இருக்கிறது. சிரிப்பும் வருகிறது. ஆனால் சிந்தனையைத் தூண்டவில்லையே! எதிர்த்தரப்பினர், அத்வானிக்கு பெயர் மாற்றம் செய்ய எத்தனை நேரமாகிவிடும்?

## நீங்கள் கேட்டவை

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

? ''பாரபட்சமற்ற, நேர்மையான அரசு தான் முக்கியம். சொந்தம் என்பது எப்போதும் முக்கியம் கிடையாது'' என்று தமிழக முதல்வர் கூறியிருக்கிறாரே?

! அதே முதல்வர் அடுத்த இரு தினங்களுக்குப் பிறகு, 'குடும்பத்தைக் கொண்டு போய்க் குப்பைத் தொட்டியிலா போட முடியும்?' என்று கோபப்பட்டு, ராமதாஸுக்குப் பதில் சொல்லியிருக்கிறார்! இரண்டுமே முக்கியம் என்பதை ஏற்பதும் அவற்றைப் பிரித்துவைத்து, பாரபட்சமின்றி செயல்படுவதும்தான் எல்லாவற்றைக் காட்டிலும் முக்கியம்.

# ...ட்டம் வருதாமே?

● வெ.ராம்குமார், வேலூர்

? ''நான் ஆட்சிக்கு வந்தாலும், 'ஜீம்பூம்பா' என்று சொல்லி, ஊழலை ஒழித்து விட முடியாது'' என்கிறாரே விஜயகாந்த்?

! 'ஜீம்பூம்பாவே' தேவையில்லை. தலைமைப் பொறுப்பில் இருப்பவர், லஞ்ச-ஊழலுக்கு அப்பாற்பட்ட தூயவராக விளங்கி, அதில் ஈடுபடக்கூடியவர் மேல் உடனடி நடவடிக்கை எடுக்கத் தயாராக இருந்தாலே போதும். விஜயகாந்துக்கு இந்த நம்பிக்கை இல்லையெனில் அவர் அரசியலுக்கே வரக்கூடாது!

● ஜி.குப்புசாமி, சங்கராபுரம்

? பா.ஜ.க. ஆட்சிக்கு வந்தால் பொடாவைவிடக் கடுமையான சட்டம் கொண்டுவருவோம் என்று அத்வானி கூறியுள்ளது பற்றி...?

! பயங்கரவாதத்தைக் கட்டுப்படுத்த உதவுவதற்குப் பதில் விபரீதமாகத்தான் முடியும். உள்நாட்டில் நல்லிணக்கத்துக்கான சூழல், அயலுறவு மூலம் பயங்கரவாதத்துக்கு எதிரான உலகளாவிய விழிப்புணர்வு - இவற்றுக்கு முயற்சி செய்வது தான் புத்திசாலித்தனம்.

● வே. சித்ரா, கும்மிடிப்பூண்டி

? ஒரிசாவில் மதக் கலவரம் பற்றி எரிந்துள்ளது எதைக் காட்டுகிறது?

! காந்தி, புத்தர், கிறிஸ்து என்று மகான்கள் எவ்வளவுபேர் எப்படி வாழ்ந்து காட்டினாலும், மனித மனங்கள் அவ்வளவு சுலபமாகப் பக்குவம் அடைந்துவிடுவதில்லை என்பது புரிகிறது.



பொடாவினும் கடுமை!

* சிரிக்க மட்டும்...!

* சூழும் ஆபத்து!

● கே. சுதர்ஷன்,

தூத்துக்குடி

? 'கல்வியைத் தனியாரிடம் விட்டுவிட்டு மதுவை மட்டும் அரசே விற்பனை செய்யலாமா?' என ராமதாஸ் கேட்டுள்ளாரே?

! 'அரசே' என்ன, மதுவை யாருமே விற்பனை செய்யாதிருப்பதுதான் நல்லது. பூரண மது விலக்கைத்தான் டாக்டரும் வலியுறுத்தி வருகிறார் என்கிறபோது, இந்த ஒப்பீடு அவசியமில்லை. நிற்க, கல்வி, அதிலும் உயர் கல்வி, தனியார் நிர்வாகத்தில் நடப்பதே நல்லது. இதற்குச் சான்று - 14 உலகத் தர பல்கலைக்கழகங்களை நம் நாட்டில் நிறுவ முயன்று வரும் யூ.ஜி.ஸி, அவற்றின் துணை வேந்தர் நியமனங்களில் அரசுக்கு அதிகாரம் இருக்கக்கூடாது என்று பலமாகச் சிபாரிசு செய்துள்ளது!

● டி.ஜெய்சிங்,

கோயமுத்தூர்

? 'ரேஷன் அரிசியை இலவசமாகப் போடும் காலம் வரும்' என்று ஸ்டாலின் கூறியிருக்கிறாரே?

! அடுத்த தேர்தல் வாக்குறுதி இதுதான் என்பதைப் பூடகமாகச் சொல்கிறார் போலும்.

● பி.பாலாஜி கணேஷ்,

கோவிலாம்பூண்டி

? குஜராத் முதல்வர் நரேந்திர மோடிக்கு அமெரிக்கா செல்ல விசா மறுக்கப்பட்டுள்ளதே. அவரைக் கண்டு அமெரிக்கா ஏன் அஞ்சவேண்டும்?

! அது அச்சமல்ல; மோடி மனித உரிமை மீறல் நிகழ்த்தியதாக அமெரிக்கா கருதுவதால் விளைந்த நிராகரிப்பு.

● என். சீத்தாலட்சுமி,

சென்னை - 40 ❐

? வீட்டில் பள்ளி மாணவ மாணவிகளுக்குப் பாக்கெட் மணி கொடுப்பதே தவறு என்கிற எண்ணம் இருக்கையில், புதுவை முதலமைச்சர் வைத்தியலிங்கம், பள்ளி மாணவர்களுக்குத் தலா 250 ரூபாய் உடனடியாக வழங்க ஏற்பாடு செய்திருக்கிறரே?

! பெற்றோருக்கு அறிவித்துவிட்டுத்தானே தருகின்றார். பாக்கெட் மணியானாலும் சரி, அரசு தரும் உதவித் தொகையானாலும் சரி, நல்ல முறையில், மாணவனின் முன்னேற்றத்துக்காகப் பயனாகிறதா என்று கவனிக்கவேண்டியது பெற்றோர் கடமை. பணமாகத் தராமல் வங்கிக் கணக்கில் நேரே செலுத்திவிடலாம். பாடப் புத்தகங்கள் அல்லது சீருடையாக வழங்குவது மேலும் நல்லது.



✱ பாக்கெட் மணி பழக்கம்!



✱ புளிக்கும் பழம்!



✱ ஜிம்பூம்பா ஜூட்!

❐ ரூ 100 பரிசு பெறுபவர்:
என். சீத்தாலட்சுமி,
சென்னை - 40

★ ரூ. 50 பரிசு பெறுபவர்:
எஸ். பக்கிரிசாமி, திருவாரூர்

ஷோபா சந்திரசேகர் எழுதிய

## 'என் செல்ல தளபதி'

தொடருக்கு வாசகர்கள் அளித்த
ஆரவார வரவேற்பை, ரசிகர்கள் கொடுத்த
பங்கேற்பை, தனது பயணத்தின்
அடுத்த இலக்கைப்
பற்றியெல்லாம்...
உங்களோடு பேசும்



## இளைய தளபதி விஜய்யின் சிறப்புப் பேட்டி

**28.9.2008**

## கல்கி

இதழில்...







# சிரி அடுத்த சேனல்?

சினிமா, செய்தி, குழந்தைகள் என்று பார்வை யாளர்களைப் பகுதி பகுதியாகப் பிரித்து, தன்னுடைய சேனல் எண் ணிக்கையை அதிகரித்துக்கொண்டே வருகிறது சன் நெட்வொர்க். அந்த வரிசையில் சன் நெட்வொர்க்கின் சமீ பத்திய அறிமுகம் 'காமெடி திரை'. நகைச்சுவைக்கு என்று பிரத்யேகமான முதல் சானல் என்றுகூட இதைச் சொல்ல லாம். மேலும் பல சானல்களைத் துவக்குவது என்பது சன் நெட்வொர்க் மேற்கொண்ட புதிய முடிவல்ல. இடை யில் நடந்த பல்வேறு குழப்பங்களால் தாமதம் ஏற்பட்டது. அவ்வளவுதான். இப்போதும், அடுத்து ஒரு பக்தி சானல் கொண்டுவரும் திட்டம் இருக்கிறது என்றும் பேச்சு அடிபடுகிறது. இதற் கிடையே வரும் இன்னொரு தகவல் தான் சுவாரஸ்யமானது.

நவம்பர் மாதத்தில் இருந்து 'சிரிப் பலை' என்ற பெயரில், நகைச்சுவை சேனல் ஒன்றைக் கொண்டுவரும் முயற்சியில் இருக்கிறது கலைஞர் டி.வி. அதை மோப்பம் பிடித்துவிட்ட சன் டி.வி. தரப்பு, சடாரென்று இந்த 'காமெடி திரை'யை ஆரம்பித்துவிட்டது.

தவிர, ரிலையன்ஸ் குழுமம் தன் னுடைய டி.டி.எச். சேவையை தமிழ் நாட்டில் விஸ்தரிக்கப் போகிறது. அரசு கேபிள் கார்ப்பரேஷன், ராயல் கேபிள் விஷன் பிரச்னைகள் என்று அல்லாடு வதைவிட, டி.டி.எச். சேவையை விஸ்தரித்துவிட்டால் பிரச்னையில்லை என்பது சன் நெட்வொர்க்கின் கணக்கு.

அதற்கு பார்வையாளர்களைக் கவர வேண்டும் என்பதற்காக இந்த காமெடி திரையை டி.டி.எச். இணைப்பு பெற்ற வர்கள் மட்டுமே பார்க்கும்படி ஒளிபரப்புகிறது. இதனால், கேபிள் இணைப்புகளில் இருந்து டி.டி.எச். இணைப்புக்குப் பலரும் மாறு வார்கள் என்பது சன் நெட்வொர்க்கின் எதிர்பார்ப்பு.

சேனலைத் தொடங்கிவிட்டதே தவிர, அதற்கான களப்பணிகள் எதையும் இன்னும் தொடங்கவில்லை. கையி லிருக்கும் ஸாஃப்ட்வேரைக் கொண்டே, அதனால் மூன்று மாதங்கள் ஒளி பரப்பமுடியும் என்று சொல்கிறது சேனல் வட்டாரம். செய்திகள் இப்படி பல வகையாகப் பரவினாலும்கூட, காமெடிக் கென்று வெளிவரும் முதல் சானல் என்பது சிறப்புதான். ஆனால் அதையும் சினிமாவை வைத்தே நிரப்பாமல் வித்தியாசமாகச் செய்தால் மனசாரப் பாராட்டிவிடலாம். என்ன செய்யப் போகிறார்களோ? பார்ப்போம்.

**- சொல்வலை வேட்டுவர்**

கலைமாமணி கௌரவங்கள் எல்லாம் முடிந்து, பொன்னி ஹவுஸில் ஹாயாக உட்கார்ந்திருந்தார் குன்னக்குடி வைத்தியநாதன். 'ம்யூஸிக் ஸ்பெஷலு'க்கு ஒரு பேட்டி என்றதும் உற்சாகமாக ஒப்புக் கொண்டார்.

**மற்ற வயலின்களுக்கும் நீங்கள் உபயோகிக்கும் வயலினுக்கும் சப்த வேறுபாடு நிறைய தெரிகிறதே?**

''நிறைய பேர் கேட்கிறார்கள். எந்த சிறப்புச் சேர்க்கையும் என் வயலினில் இல்லை என்று சொன்னால் நம்ப மாட்டேன் என்கிறார்கள். வேண்டுமானால் என் வயலினை உங்களிடம் தருகிறேன். வேறு எந்த வித்வானிடம் வேண்டுமானாலும் காட்டி செக் பண்ணி, சந்தேகம் தீர்த்துக்கொளுங்கள்! 'கைமணம்' என்று சமையலில் ஒரு தியரி உண்டு. அது போலத்தான் இதுவும்.''

**இசை விமர்சகர்கள் உங்களைப் பெரும்பாலும் ஒப்புக்கொள்வதில்லையே?**

''நான் விமர்சகர்களுக்காக வாசிப்பதில்லை. ரசிகர்களுக்காகத்தான். ரசனை என்பது, ஆளுக்கு ஆள் மாறுபடக்கூடிய விஷயம். சபாக்களில் வாசிப்பது போல, மரபுசார்ந்து என்னால் பொதுமேடைகளில் வாசிக்க முடியாது. நான் ஒரு டிப்பார்ட்மென்ட்டல் ஸ்டோர் மாதிரி. கேட்பது கிடைக்கும். பிடித்ததை எடுத்துக் கொள்ளலாம்.''

**வயலினில் நீங்கள் செய்யும் Gimmicks வேலைகளும் இந்த அடிப்படையில்தானா?**

"Gimmicks பண்ணுவது ரொம்பக் கஷ்டம் தெரியுமா? அதுவும் வயலினில்!

# “நான் ஒரு டிப்பார்ட்மென்ட்டல் ஸ்டோர்”

அசுரத்தனமான பயிற்சி வேண்டும் அது, கடவுள் அருள்.

**''கச்சேரியின் நடுவே நீங்கள் செய்யும் அங்கசேஷ்டைகளும் ஜனரஞ்சகம் கருதித்தானா?''**

''நிச்சயமாக. ஒரு சினிமா அல்லது நாடகம் எனில் 'மூவ்மென்ட்' இருக்கும். ஒரே இடத்தில் உட்கார்ந்து பார்த்தாலும் போரடிக்காது. ஆனால் மேடைக்கச்சேரி அப்படி அல்ல. ரசிகர்களை ஆரம்பம் முதல் கடைசிவரை ஓர் உற்சாக நிலையில் வைத்திருக்கவே, என் முகபாவங்களை - பாடலின் ஏற்ற இறக்கங்களுக்கு ஏற்ப மாற்றி, மாற்றி, உற்சாகம் பற்ற வைக்கிறேன்.

சந்திப்பு : **ஔரங்கசீப்**

*(1995 ஆம் ஆண்டு, கல்கி இசைச் சிறப்பிதழில் 'குன்னக்குடி வைத்தியநாதன்' அளித்த பேட்டியின் தொகுப்பு)*



# அன்றும் இன்றும் என்றும்

திருமயிலை வாதபுரீசய்யரைக் குறித்து நீங்கள் இதுவரையில் அறிந்து கொள்ளவில்லை என்றால், அது அவருடைய தவறாகாது. அவரை நீங்கள் தெரிந்துகொள்ளும் பொருட்டு, மனிதப் பிரயத்தனத்தில் என்னென்ன செய்ய லாமோ அவ்வளவும் அவர் செய்துதான் வருகிறார். சாதாரணமாக, காலை 9 மணிக்கு மேல் 10 மணிக்குள் மயிலாப் பூரிலிருந்து பாரிஸ் கார்னருக்குப் போகும் மோட்டார் பஸ்களில் ஒன்றில் அவரை நீங்கள் சந்திக்கலாம். அவரை இன்னாரென்று அடையாளம் கண்டு பிடிப்பது மிகவும் சுலபமான காரியம். வெண்கலக் கடையில் யானை புகுந்தது போல் பஸ்ஸிலுள்ள மற்றப் பிரயாணிகளுக்கு ஜிஞ்சாமிர்தமாகப் பிரசங்கமாரி பொழிந்துகொண்டிருக்கும் ஒருவரைக் கண்டீர்களானால், அவர்தான் பிரசித்தி பெற்ற வாதபுரீசய்யர் என்று நீங்கள் நிச்சயம் செய்துகொள்ளலாம்.

அவர் இந்த விஷயத்தைப் பற்றித் தான் பேசுவார். இதைப் பற்றிப் பேச மாட்டார் என்று கிடையாது. மனித வடிவிலுள்ள 'என்ஸைக்ளோபீடியா' ஒன்று உண்டு என்றால், அது நமது வாதபுரீசய்

## அமரர் கல்கி

யர்தான். திரிகால ஸந்தியா வந்தனத்தின் மகிமையிலிருந்து ஈன்ஸ்டின் தியரி வரையில், வால்மீகி ராமாயணத்திலிருந்து பெர்னாட்ஷாவின் கொள்கைகள் வரையில், ஏ.பி.ஸி.டி.ஈ. விடமின்களிலிருந்து 'மஞ்சூரியா தகராறு' வரையில் அவருக்குத் தெரியாத விஷயம் ஒன்றும் இல்லை.

வண்டி சொகுஸாக ஓடும் பொருட்( அதன் சக்கரங்களுக்கு எண்ணெய் போ( வது வழக்கமல்லவா? அதுபோல, வா( புரீசய்யர் பேசும்போது இடையிடைே 'ஆமாம்', 'வாஸ்தவந்தான்', 'சரிதான் 'நியாயந்தானே?', 'ஆமான்னாக்கே 'ரொம்ப சரி' என்று மட்டும் நீங்க(



சொல்லி வரவேண்டியது. அப்போது அவரும் மளமளவென்று ஸரளமாகப் பேசிக்கொண்டு போவார்.

பஸ் ஸ்டாண்டில் நின்று அவர் வரவுக்காகக் காத்திருந்தீர்களானால், இன்னொரு வேடிக்கை பார்க்கலாம். ஒரு கையில் சிற்றுண்டிப் பொட்டணமும், மற்றொரு கையில் முதல் நாள் பத்திரிகையும் எடுத்துக்கொண்டு அவசர அவசரமாய் வந்து பஸ்ஸில் ஏறுவார். ஏறும்போதே, ''கேட்டீர்களா, ஸார்! மஹெஞ்சோதாரவில் 5,000 வருஷத்துக்கு முன்னாலிருந்த சிவ லிங்கத்தைக் கண்டு பிடித்திருக்கிறார்களாம்! சிவலிங்கத்தின் பெருமைகளைப் பற்றி நான் எடுத்துச் சொன்னபோது இந்த முட்டாள்கள் சிரித்தார்கள். இப்போது வெள்ளைக்காரன் வாயால் வந்ததும் பல்லை இளித்துக்கொண்டு கேட்கிறார்கள்'' என்று சொல்லிக்கொண்டே ஏறுவார். நீங்களும் அவருடன் அந்த வண்டியில் ஏறுவீர்கள் என்று அவர் எண்ணம்.



ஒரு சமயம், லஸ் சர்ச் ரோடு முடிந்து மேரப்ரீஸ் ரோடு ஆரம்பமாகும் இடத்தில் நான் வண்டிக்காகக் காத்திருக்க நேர்ந்தது. ஒரு பஸ் ஒரே ஒரு பிராயணியுடன் வருவதைப் பார்த்தேன். அந்தப் பிரயாணி நமது வாதபுரீசய்யர்தான் என்று தெரியவந்தது. அவர் மோட்டாரின் முன் ஆசனத்தில் உட்கார்ந்து, டிரைவருக்கும் கண்டக்டருக்கும் மாற்றி மாற்றிப் பிரசங்கம் செய்துகொண்டு வந்தார். வண்டி

# திருமயிலை வாதபுரீசய்யர்

என்னை ஏற்றிக்கொள்வதற்காக நின்றது. கண்டக்டர், ''நீங்க மகாராஜாராயிருக்கணும். இந்த ஐயர் பக்கத்தில் உட்காருங்கோ. பாஸஞ்சரைக் கூப்பிடவொட்டாமல் அடிக்கிறாரு'' என்றான். உடனே அவர், ''பாருங்கள், ஸார்! 'பன்றிக்கு முன்னால் முத்தைப் போடாதே' என்று தெரியாமலா சொன்னார்கள்? ''என்று ஆரம்பித்துவிட்டார்.

வாதம் செய்வதில் வாதபுரீசய்



"மீட்டிங்குக்கு வந்தவங்களுக்கெல்லாம் கர்ச்சீப் குடுக்கறாங்களே?"

"கண் துடைப்புக்காத்தானே இவங்க மீட்டிங் நடத்தறாங்க!"

-- லெ.நா.சிவக்குமார்

ரோடு வழியாகப் போவோர் வருவோரெல்லாம் பார்த்து ஆச்சர்யப்பட்டார்கள். கடைசியாக அவர் ரேடியோ ஸ்டேஷனுக்கு அருகில் வந்ததும், அங்கே நின்ற கும்பல் அவ்வளவும் தம்மை உற்று நோக்கிச் சிரித்துக் கொண்டே பார்ப்பதைத் தற்செயலாகக் கவனித்தபோதுதான், ஏதோ விஷயம் இருக்கிறது என்று திரும்பிச் சுற்றும் முற்றும் பார்த்தார். பின்னோடு வந்த நண்பரைக் காணோம்!

யருக்குள்ள பிரேமையை விளக்கக்கூடிய பல சம்பவங்களை அவர்களுடைய நண்பர்கள் கூறுவார்கள்.

மற்றொரு தடவை, வாதபுரீசய்யரும் அவருடைய சிநேகிதர் ஒருவரும் மயிலாப்பூரிலிருந்து திருவல்லிக்கேணியை நோக்கி கடற்கரை ஓரமாக 'வாக்கிங்' போய்க்கொண்டிருந்தார்கள். வழக்கம்போல் வாதபுரீசய்யர் சண்டப் பிரசண்டமாகப் பேசிக்கொண்டு வந்தார். பேச்சு வேகத்தைப் போல் நடை வேகமும் அவருக்கு உண்டு. ஆதலின், அவருடன் வந்த நண்பர் எப்போதும் ஓர் அடி பின்தங்கியே வந்தார். ஐஸ் ஹவுஸுக்குப் பக்கத்தில் வந்ததும், அந்த நண்பர் அங்கே கல்மேடையில் அமர்ந்திருந்த வேறொரு நண்பரைப் பார்த்தார். அவருடன் ஏதோ பேசுவதற்காக நின்றுவிட்டார். அவர் நின்றது வாதபுரீசய்யருக்குத் தெரியாது. எனவே, அவர் கைகளைப் பலமாக ஆட்டி வழக்கம்போல் பேசிக்கொண்டே போனார். இம்மாதிரி ஒரு மனிதர் தமக்குத் தாமே உரத்துப் பேசிக்கொண்டு வரும் வேடிக்கையை, பீச்சு

ஒருநாள் நான் மெரீனா 'பாண்டு ஸ்டாண்டு'க்குப் பக்கத்தில் போட்டிருக்கும் பெஞ்சுகளில் ஒன்றில் உட்கார்ந்தேன். எனது அடுத்த வீட்டுப் பஞ்சநாத முதலியார் கையில் திருவாசகப் புத்தகத்துடன் அங்கு வந்தார். 'நமஸ்காரம்' என்று சொல்லிக் கும்பிட்டேன். அவரும் கும்பிட்டுவிட்டு என் பக்கத்தில் உட்கார்ந்தார். இதற்குள் தூரத்தில் ஸ்ரீமான் வாதபுரீசய்யர் தன்னந்தனியாக வருவதைப் பார்த்தேன். எனக்குக் கதிகலங்கிப் போயிற்று. என்னைப் பாராமல் அவர் நெடுகப் போய்விடக் கூடாதா என்று எண்ணினேன். ஆனால், துரதிர்ஷ்டம் விடுமா? என்னை அவர் பார்த்தேவிட்டார்! நான் பயந்தது போலவே என்னை நோக்கி வந்தார். சாதாரணமாய், இத்தனை நெருக்கடியான சமயங்களில்தான் என்னுடைய மூளை மிக நன்றாய் வேலை செய்வது வழக்கம். அவரை நான் பார்த்ததாகக் காட்டிக் கொள்ளாமல் சட்டென்று எழுந்தேன். பக்கத்திலிருந்த செடிகளின் வழியாகப் புகுந்து பெரிய ரோட்டைச் சேர்ந்தாற்

போல் கடலின் உட்புறமாய்ச் செல்லும் கால் நடைப்பாதை வழியாக அவசரமாக நடக்கத் தொடங்கினேன். கொஞ்ச தூரம் போனதும் திரும்பிப் பார்த்தேன். வாத புரீசய்யர் வந்து அதே பெஞ்சியில் நான் காலி செய்த இடத்தில் உட்கார்ந் தார். ''ஓகோ? திருவாசகமா? அடடா! நூலென்றால் எல்லாம் நூலாகுமா? திருவாசகந்தான் நூல்...'' என்று ஐயர் தொடங்கியது என் காதில் விழுந்தது. என்னை அறியாமல் எனக்குச் சிரிப்பு உண்டாயிற்று. அப்போது என்னை யாராவது பார்த்திருந்தால், வாதபுரீசய்யருக்கு அண்ணனாகவே என்னைக் கருதியிருப்பார்கள்.

கடைசியாக, சுமார் 6 மணிக்கு, முதலியார் எழுந்து 'நமஸ்காரம், போய் வருகிறேன்' என்று விடை பெற்றுக் கொண்டு போனார். அவர் போனவுடனே நான் அங்கு போய்ச் சேர்ந்தேன். என்னைக் கண்டதும் வாத புரீசய்யர், ''என்ன, அப்பா! உன்னைப் பார்த்துவிட்டு இங்கே வந்தேன், எழுந்து ஓடிவிட்டாயே? உன்னைப் போன்றவர்களுக்கு விஷயத்தை எடுத்துச் சொல்லித்தான் என்ன பயன்? ஒன்றுமில்லை. இப்போது உட்கார்ந்திருந்தாரே, இங்கே ஒருவர்! அவரைப் போல் இருக்க வேண்டும். விஷயங்களை எவ்வளவு ரஸமாய்க் கேட்கிறார்? எவ்வளவு நன்றாய்க் கிரஹித்துக்கொள்கிறார்? அடடா! அவரை மறுபடி எங்கே பார்க்கலாம் என்று கேட்க மறந்துவிட்டேனே? அதோ போகிறார். கூப்பிடு, கூப்பிடு! ஸார்! ஸார்!'' என்று கையைத் தட்டிக்கொண்டு கூப்பிடத் தொடங்கினார்.

**"விஷயங்களை எவ்வளவு ரசமாய்க் கேட்கிறார்? அடடா"**
**"அவருக்குக் காது செவிடு"**
**"என்ன?"**
**"ஆமாம் இரண்டு காதும் செவிடு"**

நான் அவரைக் கையமர்த்தி, ''வேண்டாம்; அவரைக் கூப்பிட்டுப் பிரயோசனமில்லை'' என்றேன்.

''ஏன்? ஏன்?''

''நீங்கள் எவ்வளவு சத்தம் போட்டுக் கூப்பிட்டாலும் அவருக்குக் காது கேட்காது.''

''எதனால் அப்படி!''

''அவருக்குக் காது செவிடு!''

''என்ன?''

''ஆமாம்! இரண்டு காதும் செவிடு. இடியிடித்தாலும் கேட்காது!''

''அட பாவி! நிஜமா?''

''முழு நிஜம். அவர் எனக்கு அடுத்த வீட்டுக்காரர் தான். ஒருசமயம் அவர் வீட்டு ஜனங்கள் எங்கேயோ போயிருந்தபோது அவர்மட்டும் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டு வீட்டுக்குள் இருந்தார். ஊருக்குப் போனவர்கள் இரவில் திரும்பி வந்தார்கள். எவ்வளவோ கதவை இடித்தும், சத்தம் போட்டும் பயன்படவில்லை. கடைசியாக, என் வீட்டு முற்றத்தின் வழியாக சுவரேறிக் குதித்து அவரிடம் தகவல் தெரிவிக்க வேண்டியதாயிற்று...''

நான் பேசிக்கொண்டிருக்கும் போதே, வாதபுரீசய்யர் நடையைக் கட்டிவிட்டார். அவருக்கு அன்று ரேடியோ ஸ்டேஷனுக்கு அருகில் நேர்ந்த கதி எனக்கும் 'வரப் போகிறதே என்று பேச்சை நிறுத்தினேன்.

அன்றுமுதல், வாதபுரீசய்யர் என்னைக் கண்டால் முகங்கொடுத்துப் பேசுவதில்லை. அதன் பொருட்டு ஆண்டவனிடம் அளவிலா நன்றியுடையவனாய் இருக்கிறேன்.

**(- ஆனந்தவிகடன், 15.06.1932)**

உடையழகு...
நடை பழகு...



உலகிலேயே மிக அழகான, வித்தியாசமான தனி நபராகத் தெரிய வேண்டுமா, எதிரிகளே இல்லாமல் நண்பர்கள் புடைசூழ இருக்க வேண்டுமா...? சிம்பிள். முகத்தில் எப்போதுமே ஒரு புன்னகையை அணியுங்கள். வெரி சீப்! ஆனால் எஃபெக்ட் எக்கச்சக்கம். 'ஸ்மைல் ப்ளீஸ்' என ஃபோட்டோகிராஃபர் கூவினால்தான் சிரிப்பேன் என பிடிவாதமெல்லாம் பிடிக்கக்கூடாது. சிரித்த முகத்துடன் இருப்பவர்களுக்கு


* புன்னகை அரசி

வாழ்க்கையில் வெற்றி நிச்சயம்! 'சரி, புன்னகைப்பது எப்படி?' என்பவர்களுக்கு டிப்ஸ் கீழே...

☺ அழகிய சீரான பற்கள் இருந்தால்தான் சிரிக்கணும் என்ற தவறான அபிப்ராயம் இருந்தால் மாற்றிக்கொள்ளவும். உங்களுக்கென இருக்கும் பிரத்யேக ஸ்மைல்தான் உங்களுடைய ஸ்டைல்!

☺ புன்னகை என்பது ஒட்டுவாரொட்டி போல... ஒருத்தர் சிரித்தாலே போதும், கூட இருப்பவர்கள் மீதும் பக்கென்று ஒட்டிக்கொள்ளும்.

☺ கண்களால் சிரிக்கக் கற்றுக்கொள்ளுங்கள். இதற்கு தனி பவர்.

☺ பொதுவாக ஆண்கள் சிரிப்பது மிகக் குறைவு. (என்ன வேண்டுதலோ?!) ஒரு ஆண் இன்னொரு ஆணைப் பார்க்கும்போது, களுக் கென்றோ, கொல்லென்றோ சிரிப்பதில்லை. ஆனால் நாலு பெண்கள் ஓரிடத்தில் சேர்ந் தாலே சிரிப்புதான்... அதகளம்தான்...

# புன்னகைக்கு

பளீரென்ற புன்னகைக்கு என்ன செய்ய வேண்டும்? என்ன செய்யாமலிருக்க வேண்டும்?

☺ லஞ்ச், டின்னருக்குப் பின் ஒரு ஆப்பிள் கண்டிப்பாகச் சாப்பிடவும். பற்களில் மஞ்சள் கறை படிவது நின்றுவிடும். சேலரி மற்றும் காரட்டும்கூடச் சாப்பிடலாம். ஸ்க்ரபர் போல பற்களிலிருந்து கறைகளை விரட்டிவிடும்.

☺ சாஃப்ட் ட்ரிங்ஸ் மற்றும் ஜூஸ் குடிக்கும் போது ஸ்ட்ரா உபயோகிக்கவும்.



☺ வைட்டமின்-சி நம் உடலின் ஒவ்வொரு செல்லுக்கும் அத்தியாவசியத் தேவை. ஆரஞ்சு, எலுமிச்சை ஜூஸ் தாராளமாகப் பருகவும். பற்கள் மற்றும் ஈறு வலுவாகும்.

☺ சீஸ், பால், தயிர்... என கால்ஷியம் ரிச் பொருட்களைச் சாப்பிடவும்.




● புன்னகை இளவரசி

☺ தினசரி இருமுறை வெந்நீரில் உப்பைப் போட்டுக் கொப்பளித்தாலே சகல பல் வியாதிகளிலிருந்தும் விடுதலை!

☺ என்ன சாப்பிட்டாலும், குடித்தாலும் உடனே கடகட வென்று தண்ணீர் குடிக்கவும். 'வாஷிங் வித் வாட்டர்.'

☺ மிக மிக ஜில் அல்லது பயங்கர சூடான பானங்களைத் தவிர்ப்பது நல்லது. டெம்ப்ரேச்சர் மாறுபடுவதால் பல் எனாமல் பாதிப்படையும்.

☺ பற்களை வெண்மையாகக் காண்பிக்க, டார்க் ஷேட் லிப்ஸ்டிக் போடவும்.

☺ டூத் ப்ரஷ்ஷை அடிக்கடி மாற்றவும். தினசரி இருமுறை ப்ரஷ் செய்யவும்.

☺ புகை பிடித்தாலும் பற்கள் கறுத்துவிடும். பல் டாக்டரிடம் வருடத்துக்கொருமுறை போய் கண்டிப்பாக க்ளீன் செய்து கொள்ள வேண்டும்.

## - பற்கள் பற்றிய டிப்ஸ்

☺ ப்ளாக், க்ரீன் டீ பற்களுக்கு நல்லது. இதிலிருக்கும் பாலிஃபெனோல்ஸ், பற்களில் படியும் செல்லுகளை வரவிடாமல் பாதுகாக்கும். பற்சிதைவு ஏற்படாது. வாய் நாற்றம் இருக்காது.

☺ மிக நிதானமாகச் சாப்பிடவும். நன்றாக மென்று மெதுவாகச் சாப்பிட்டால், வாயில் சுரக்கும் உமிழ்நீர் பற்களில் உணவுப்பொருட்களை ஒட்டாமல் பாதுகாக்கும்.

அழகாகத் தெரிவதற்கு புன்னகை மட்டுமே போதும். கண்ணாடிக்கெதிரே நின்று ஸ்மைல் செய்யுங்கள். உங்களுடன் முப்பத்திரண்டு சிநேகிதிகளும் சேர்ந்து சிரிப்பதைப் பார்க்கலாம்.

**- லதா சேகர்**



# ஜாதிக் குப்பியில் சரத்?

**ச**ரத்குமார் சமத்துவம் என்ற நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டுதான் கட்சியைத் துவக்கினார். ஆனால் அவரை ஜாதிக் குப்பிக்குள் அடைக்க முயற்சிக்கிறார்களாம், கட்சியின் முன்னணிப் பிரமுகர்கள் சிலர். நாடார் சமூகத்திடையே, தங்களது செல்வாக்கை அதிகரித்துக்கொள்ளும் வகையிலும் மற்ற சமுதாயத்துப் பிரமுகர்களை மட்டம் தட்டும் வகையிலும் இவர்களது செயல்பாடுகள் இருப்பதாகக் கட்சியில் முணுமுணுப்பு. இதற்கிடையே கட்சியில் இருக்கும் ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி ஒருவர், 'நான்தான் கட்சி' என்று, பல கட்சிகளோடு கூட்டணி பேசி வருகிறாராம். பாவம் சரத்! படங்களை முடிப்பதில் பிஸியாக இருக்கிறார் அவர்.

**ச**மீபத்தில் சோனியா காந்தி சென்னைக்கு வந்திருந்தபோது, கவர்னர் மாளிகையில் அவரைச் சந்தித்தார்கள், காங்கிரஸ் பிரமுகர்களான கே.எஸ்.அழகிரி, கராத்தே தியாகராஜன், சிரஞ்சீவி ஆகியோர். 'தமிழகத்தில் கட்சி வளர வேண்டுமென்றால் உடனே மாநில நிர்வாகிகளைப் போடவேண்டும்' என்று மனு கொடுக்க, 'அதற்கு நடவடிக்கை எடுக்கப்படுகிறது' என்று சோனியா சொல்லியிருக்கிறார். பின்னர் கராத்தேயும், சிரஞ்சீவியும் ''மேடம், உங்களுக்கு ஒன்றுமே தெரியாது என்று காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர் ஒருவர் பேட்டி கொடுத்திருக்கிறார்'' என்றவுடன், ''காங்கிரஸ் எம்.எல்.ஏ.வா?'' என்று ஆச்சர்யத்துடன் கேட்டிருக்கிறார் சோனியா. உடனே, தொட்டியம் எம்.எல்.ஏ. ராஜசேகர் அளித்த பேட்டியின் பேப்பர் கட்டிங்கை சோனியாவிடம் கொடுத்திருக்கிறார்கள். அதை வாங்கி மேலிடப் பார்வையாளர் அருண்குமாரிடம் கொடுத்தார் சோனியா. வாசன் ஆதரவு எம்.எல்.ஏ. ஒருவரைக் காலி செய்த திருப்தியோடு வெளியே வந்தார்கள் சிதம்பரம் ஆதரவுப் பிரமுகர்களான கராத்தேயும், சிரஞ்சீவியும்.



**தி**ரைத்துறையைக் கலக்கும் கார்ப்பரேட் குழுமங்களின் வரிசையில், கலாநிதி மாறனின் சன் நிறுவனமும் சேர்ந்திருக்கிறது. சன் பிக்சர்ஸ் என்று பட நிறுவனத்துக்குப் பெயர் வைத்திருக்கிறார்கள். மாதத்துக்கொரு படம் ரிலீஸ் செய்ய வேண்டும் என்பது நோக்கமாம்.

– ஸ்ரீநி

நியூ(ஸ்) ஃபேஷன்

ப்ளஸ்

◆ கதாநாயகி, விலைமாதுவாக இருந்தாலும், அவளை இல்லற வாழ்க்கைக்கு ஏங்கவைத்திருக்கும் கதாசிரியரின் புத்தி சாலித்தனம்.

◆ வன்முறை, இரத்தவாடை வீசாத திரைக்கதை அமைப்பு

◆ 'கத்தி மேல் நடக்கும் கதை' யென்பதால், காட்சியமைப்பில் கவனத்தைக் குறைத்து, வசனங்களில் எஸ்டாபிலிஷ் செய்திருக்கும் இயக்குநரின் உத்தி.

◆ விலைமாது பாத்திரத்தை உள்வாங்கி நடித்திருக்கும் நடிகை சங்கீதா.

◆ 'இன்னொரு ஹீரோ என்று சொல்லத்தக்க இளையராஜாவின் இசை. (குறிப்பாக 'கண்ணனுக்கு என்ன வேண்டும்' பாடல்)

◆ எம்.எஸ்.பாஸ்கர் அண்ட் கோ நிகழ்த்தும் காமெடி விருந்து.




◆ மனசாட்சியின்படி நடந்து கொள்ளும் போலிஸ் அதிகாரி.

◆ வலிமையான யூகிக்க முடியாத க்ளைமாக்ஸ்

◆ அந்த வகையில் தனம் 'முள்ளில் பூத்த ரோஜா'

மைனஸ்

◆ பிரேம்குமார், சங்கீதா மீது காதல் கொள்வதற்கான அழுத்தமான காரணம் சொல்லப்படவில்லை.

◆ ஜோஸியத்தின் மீது நம்பிக்கையுள்ள குடும்பம் என்றாலும், குழந்தையைக் கொல்லத் துணிவார்களா?

◆ கணவன் குடும்பத்தைப் பழிவாங்கிவிட்டு, கதாநாயகி மீண்டும் பழைய தொழிலுக்குத் திரும்புவது.

◆ கதையை உள்வாங்காத ஒளிப்பதிவு

◆ அழுத்தமான கதையின் வெப்பத்தில் தத்தளிக்கும், கதாநாயகன் 'பிரேம் குமார்'.

அந்த வகையில்...

**ஓட்டைப் பாத்திரத்தில் தங்கத் திரவம்.**

**- கனிஷ்கா**

# திருமணத்துக்கு முன்னும் பின்னும்

இதைப் படிங்க முதல்ல...

**திருமணத்துக்கு முன் :**

ஆண் : என்னால காத்திருக்க முடியாது... ஆமா... வெயிட் பண்றது கொடுமைடா சாமி.

பெண் : பின்னே நான் போயிடட்டுமா?

ஆ : நோ நோ... அப்படி நெனச்சுக்கூட பாக்காத ப்ளீஸ்....

பெ : நீங்க என்னை லவ் பண்றீங்கதானே?

ஆ : அஃப்கோர்ஸ்.... மறுபடியும் மறுபடியும்....

பெ : எப்பவாச்சும் பொய் சொல்லியிருக்கீங்களா என்னிடம்?

ஆ : இல்லவேயில்லை... எதுக்குக் கேக்கற வேஸ்டா?

பெ : நீங்க அது... கிஸ்... தருவீங்கதானே...?

ஆ : சான்ஸ் கெடச்சா விடறதாயில்ல.

பெ : என்னை அடிப்பீங்களா?

ஆ : உனக்கென்ன பைத்தியமா? நான் ஒண்ணும் அப்படிப்பட்ட ஆள் இல்ல... தெரிஞ்சுக்கோ...'

பெ : நா உங்களை நம்பலாமா...?

ஆ : ஓ... என் அரக்கியே...

பெ : டார்லிங்

**திருமணத்துக்குப் பின் :**

கீழிருந்து மேலே படிக்கவும். 'வெளங்கிடும்' ஆமா....

– லதா சேகர்

# Dr.Kamakshi Memorial Hospital



Dr. T.G. Govindarajan
President - Founder -
Medical Director

தமிழ்நாட்டிலேயே முதல்முறையாக உடலிலுள்ள புற்றுநோய்
மற்றும் இதர நோய்களை எளிதில் கண்டறிய உதவும்

## PET CT Scan

மருத்துவ சேவை நிறுவனத்தில் ஒரு மைல்கல்
தமிழகத்தில் இதுவே முதல் முறை

**Dr. காமாட்சி மருத்துவமனை**

கேன்சர் இன்ஸ்டிடுட் (wia)
இணைந்து பெருமையுடன்
அறிமுகம் செய்துள்ளது




**CANCER INSTITUTE**
Canal Bank Road
Gandhi Nagar, Adyar
Chennai - 20
Cell : 93814 36899
93814 36896

## தமிழ் நாட்டில் முதல் PET CT Scan

**இந்தியாவில் 4, 5 இடங்களில் மட்டுமே உள்ள இந்த ஸ்கேனிங் கருவியின் சிறப்பம்சங்கள்:**

* பெட் சி.டி.ஸ்கேன் என்பது உடல் அணுக்களின் செயல்திறன் பற்றியும் அணு பெருக்கத்தைப் பற்றியும் முழு தகவல்களைத் தரவல்லது.
* முக்கியமாக பெட் சி.டி.ஸ்கேன், மனிதனின் உச்சந்தலையிலிருந்து, உள்ளங்கால் வரை முழுவதும் பரிசோதிப்பதால், உடலில் எங்கெல்லாம் புற்றுநோய் இருக்கிறது? அது வேறு எங்கெல்லாம் பரவியிருக்கிறது? நோயின் தீவிரம் எந்த அளவு உள்ளது? என்பதை எல்லாம் துல்லியமாகக் கண்டறியப் பயன்படுகிறது.
* அதேபோல், ரேடியோதெரபி, கீமோதெரபி போன்ற சிகிச்சைகளுக்குப் பின் 'பீரியாடிகல் ரிவியூ' மூலம் நோயின் தாக்கம் எவ்வளவு குறைந்துள்ளது என்பதையும் கண்டறியலாம்.
* மூளையில் ஏற்படும் 'அல்ஸைமெர்ஸ்', 'பார்க்கின்சன்ஸ்', புற்றுநோய் போன்ற நோய்களை கண்டறியவும், அவற்றுக்கு எளிய முறையில் கண்டறியவும், 'பெட் சி.டி. ஸ்கேன்' பயன்படுகிறது.
* புற்றுநோய்க்கு சிகிச்சை அளிக்கும் மருத்துவர்களுக்கு எந்த மாதிரியான சிகிச்சை முறையை பின்பற்ற வேண்டும் என்று தெளிவாக உணர்த்துகிறது. இதயத்தில் உள்ள பிரச்னைகள் மற்றும் தசைகளின் செயல்பாடுகளை அறிய உதவுகிறது.

இலவச ஆலோசனைக்கு: எஸ்.சுபாஷிணி - 93451 20265, 93810 30712



#1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Tel : +91-44-22469200 (30 Lines), 66300300 (30 Lines), Fax : 22463282
E-mail : info@drkamakshimemorialhospital.org
Website : www.drkamakshimemorialhospital.org

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.